# நீதியரசர் மாண்புமிகு. ச.ஜெகதீசன் அவர்களின் வாழ்க்கை பயணம்







செங்குந்தம் வெல்க!





நீதியரசரின் பார்வையில் நீதியும் செங்குந்தமும் இரண்டு கண்கள்

# நீதியரசர் மாண்புமிகு. ச.ஜெகதீசன் அவர்களின் வாழ்க்கை பயணம்







செங்குந்தம் வெல்க!







நீதியரசரின் பார்வையில் நீதியும் செங்குந்தமும் இரண்டு கண்கள்

# உள்ளடக்கம்

## Hon. JUDGE. S.JAGADEESAN Life History

குடும்பம்



வழக்கறிஞர் தொழில்



நீதியரசராக



பல துறைகளில் தலைமை



சமுதாய பற்று




கலை பற்று



தமிழ் பற்று



# முன்னுரை

வணக்கம்,

நீதியரசரின் வாழ்க்கை பயணம் புத்தகமாக எழுதுவதின் நோக்கம் என்ன என வினா இருக்கலாம். நல்லவர்கள் வாழ்க்கை பயணத்தை அறிந்து கொள்வதில் ஒரு மனநிறைவும் வாழ்க்கையில் கடைபிடிக்க தேவையான நல் ஒழுக்கத்தை அறிந்து நமது செங்குந்தர் இனத்திற்கு ஒரு வழிகாட்டுதலை தெரிவிக்கவே நான் அவரை அறிந்தவற்றை நமது இனத்தோடு பகிர்ந்து கொள்வதற்கான ஒரு முயற்சியே இந்த புத்தகத்தை எழுத எனக்கு எண்ணம் தோன்றியது. திருவள்ளுவர் எழுதிய திருக்குறள் நமக்கு எல்லா வகையிலும் நல்லதை போதிக்கிறது.

அதுபோல இவரது வாழ்க்கை பயணம் எங்கோ யாரோ ஒருவரின் வாழ்க்கையில் இந்த புத்தகத்தை படிப்பதன் மூலம் சிறப்படைந்தது என்பது ஒன்றே இதன் வெற்றிக்கு சான்றாக அமையும். ஒரு குடும்பத்தில் மூன்று தலைமுறையாக வழக்கறிஞர் தொழிலை செய்து நீதி பரிபாலனத்தை செய்து வருவது சிறப்பு.

அந்த செயலோடு நிற்காமல் பொது நல விஷயங்களில் நாட்டமும் கலைகளின் மேல் உள்ள நாட்டமும் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட ஒரு கல்லூரியை மெருகூட்டி சிறப்படைய செய்தது முதல் தமிழ் மீது காதல் கொண்டு தமிழை வளர்க்க அவர் காட்டிய ஈடுபாடும் அளவில்லாதது.

இவரது செங்குந்த சமுதாய பற்றுக்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. நீதியரசராக பதவியில் இருந்த போதே மதுரை செங்குந்தர் மாநாட்டில் கலந்து கொண்டது அவரது சமுதாய பற்றை காட்டுகிறது. நீதியரசராய் பதவி ஏற்று யாருக்கும் சலுகை காட்டாமல் நேர்மையாக வழக்கை விசாரித்து தீர்ப்பை வழங்கிய விதம் பெருமைக்குரியது.

அதன் பொருட்டே இவரது பிரிவு உபசார விழாவில் பேசிய வழக்கறிஞர் என்.ஆர். சந்திரன் அவர்கள் "அவரை போன்ற தைரியம் நிறைந்தவரை நான் இதுவரை கண்டதில்லை" என புகழாரம் கொடுத்தார்.

இத்தனை பொறுப்புகளையும் தனி ஒரு மனிதராக செயலாற்றி தனது ஒட்டுமொத்த உடன் பிறந்தவர்களிடத்திலும் அன்பை காட்டி அரவணைத்து அனைத்து சமுதாய உறவு நிகழ்விலும் கலந்து கொண்டு ஒற்றுமை குறையாமல் அத்தனை விதங்களிலும் சிறப்பானவராக திகழ்ந்தார் என்கிற சரித்திரத்தை உங்கள் முன் பணிவன்புடன் படைத்திருக்கிறேன்.

அன்புடன்

**P.M. பாபுஜி**

நாருசிக்கும் பழங்களில் மா நகரம் என புகழ்பெற்ற நகரம் சேலம். அப்பெருநகரில் வியாபார பெருந்தகை திரு. ஆறுமுக முதலியார் வாழ்ந்து வந்தார். அவர் தேறிய முகமாய் இருந்து நகர் முழுவதும் நூல் வியாபாரம் படர்ந்து விரிந்து செழித்தது தொழில். அதனை தடுக்கவே வந்தது இரண்டாம் உலகப்போர்.

தாத்தா **திரு. ஆறுமுக முதலியார்** அவர்கள்



சரிந்தது வியாபாரம் என மனமொடிந்து போகாமல் கையில் இருப்பதை சிறப்பாக மிக குறைந்த வட்டிக்கு பணம் தரும் தொழிலை செய்து வந்த வலிமை, இருக்கும் அசையா சொத்துக்களை இழக்கா வண்ணம் மின்னியவர் ஆறுமுக முதலியார்.

திரு. ஆறுமுக முதலியார் ஈன்றெடுத்த திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் முதலில் திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் பயின்று இரண்டு வருடம் ஆசிரியராக பணிபுரிந்த பின்பு சிறப்பாய் படிப்பினை முடிக்க சென்னை சட்டக்கல்லூரி நோக்கி பயணமெடுத்து படிப்பை வெற்றி முரசோடு அகம் புகுந்தார்.

வழக்கறிஞராய் மலர்ந்த வருடம் 1939, வழக்கில் இரண்டுண்டு சைவம், அசைவம் எனப்படும் சிவில், கிரிமினல் இதில் இரண்டிலும் தேர்ந்தவராக ஜொலித்தார்.

ஆயிரத்தில் ஒருவரே இரண்டிலும் சிறப்பாக வழக்காடுபவர் சட்ட நுணுக்கங்களை கற்று தன்னை நிலை நிறுத்திய பாங்கு அவருக்கே உரிமையாகியது. இவரை விட ஜமீன் ஒழிப்பு சட்ட நுணுக்கத்தை கற்றவர் எவருமில்லை எனும் நிலை திறமைகொண்டவரை தேடி பொறுப்புகள் வந்தது. 1960-இல் மாவட்ட அரசாங்க பிளீடர் என்றும், பல வங்கி சாரா நிறுவனங்களின் தலைவரென தேடி வந்த பதவிகள் அனைத்தும் இவரால் பெருமை அடைந்தன. திரு. அ. சங்கரன் முதலியார் அவலுவலகத்தில சுமார் 15 ஜுனியர் வழக்கறிஞர்கள் இருந்தார்கள் என்றால் வழக்கறிஞர் தொழிலில் இருப்பவர்களுக்கு மட்டுமே

புரிய கூடியது. அது சாதாரணமான விஷயமல்ல 200 கட்சிக்காரர்கள் வந்து அமரக்கூடிய வகையில் தன் அலுவலகத்திற்கு முன் ஷெட் இருந்தது என்றால் திரு. அ. சங்கரன் முதலியார் திறமைக்கு அதுவே சான்றாக இருந்தது.

திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் அலுவலகத்தில் இவரோடு பயனித்த பல வழக்கறிஞர்கள் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகளாக பதவி அடைந்தது திரு. அ. சங்கரன் முதலியார் பெருமைக்கு சான்றாகும். பல நீதியரசர்களின் நட்புக்குரியவராகவே திகழ்ந்தார். அதிலும் நீதியரசர் திரு. வீராசாமியும் மிக நெருக்கமாக இருந்தார். ஒவ்வொரு வருடமும் விடுமுறை நாட்களை ஊட்டியில் கழிப்பது இருவருக்கும் வாடிக்கையாக இருந்தது. தன் பணியினை இராணுவ வீரரை போல செய்தவர் என பெயரெடுத்தவர் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களின், திறமையை பார்த்து பெருந்தலைவர் திரு. காமராசர் அவர்களின், சட்டமன்ற உறுப்பினராக நிற்க வேண்டி கேட்டுக்கொண்டதை ஆர்வமில்லாததால் நன்றி தெரிவித்து தன் தொழிலை கவனித்தார்.

திரு. அ. சங்கரன் முதலியார் திறமை தமிழகம் முழுவதும் தெரிந்ததால் 1968- ல் சென்னை பார் கவுன்சில் தலைவராக (**FIRST VOTE** ) தேர்வாகி சிறப்புற்றார். இவரது புகழை அறிந்து 1980 -இல் சேலத்து செம்மல் விருது வழங்கப்பட்டது சிறப்பாகும். சேலத்தில் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களின் இல்லம் மிக பொலிவுடன் அக்காலத்தில் இருந்தது.



**திரு. அ.சங்கரன்** அவர்களின் வீடு



**திரு. அ. சங்கரன் முதலியார்** மற்றும் **ஸ்ரீமதி உண்ணாமலை அம்மாள்**

ஸ்ரீமதி உண்ணாமலை அம்மையாரை திருமணம் புரிந்தார். இவர்களுக்கு மூன்று பெண் குழந்தைகளும், மூன்று ஆண் குழந்தைகளும் பிறந்தது. ஸ்ரீமதி உண்ணாமலை அம்மையார் விருந்தோம்பல் உலக பிரசித்து பெற்றது.

தன் ஆறு குழந்தைகளையும் தன் பாசத்தாலும் கண்டிப்பாலும் அறிவை ஊட்டி வளர்த்த பாங்கும், நல்ல எண்ணங்களை விதைத்து வளர்த்த விதமும் சொல்லில் அடங்காது இந்த தம்பதிகளின் மூன்றாவது மகனாக பிறந்தவர் நமது அன்புக்கும் மரியாதைக்கும் உரியவர் திரு. ச.ஜெகதீசன் அவர்கள் திரு. அ. சங்கரன் முதலியார் அலுவலகத்தில் அவரது இரண்டு மாப்பிள்ளைகளும் ஜுனியராக பணிபுரிந்தனர். அத்துனை பொறுமையான சிறப்பான குணவதியை மணந்ததால் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களின் மதிப்பும் மரியாதையும் கூடியது என்றால் மிகையாகாது. திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களின் நினைவாக சேலம் சாரணியர் கேம்ப் அவரது வெண்கல மார்பளவு சிலை இன்றளவும் சேலத்தில் உள்ளது. சிலரே பாலின் ஆடையாவர் மலரின் நறுமனமாகவும் இருப்பர்.

## திரு. அ. சங்கரன் அவர்களின் உருவ சிலை



அந்த வகையில் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் பெரும் பேரெடுத்தவர். உயர்ந்த சான்றிதழான ஃப்ரிமேஸனரியில் தனது சேவைக்காக விருது பெற்று உயர்ந்து விளங்கினார்.







## ஃப்ரீமேஸனரியில் உயர்ந்த ரேங்க்

திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் வழக்கறிஞர் தொழிலோடு பல அமைப்புகளின் தலைவராகவும் சேலம் சாரணர் அமைப்புக்கும் தலைவராகவும் வழக்குகளையும் பார்த்துக்கொண்டு சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத்தின் புரவலராகவும் செயல்பட்டவர். சேலம் மாநகரில் 1981 -இல் நடைபெற்ற செங்குந்த மாநில மாநாட்டு பொன்விழா மாநாட்டு மலர் குழுவிலும் இடம் பெற்று தனது பணியை சிறப்பாக செயல்படுத்தியவர். மாநாட்டிற்காக இரவு பகல் பாராது கண்விழித்து மாநாடு சிறப்பாக நடக்க அரும்பாடுபட்டார். பத்மஸ்ரீ நாச்சிமுத்து செங்குந்தரின் தலைமையில் தென் தமிழகத்தில் உள்ள சங்கரன் கோயிலில் தென்னிந்திய செங்குந்த மகா ஜன சங்க செயற்குழு கூட்டம் 1983-இல் நடைபெற்றது. அந்த கூட்டத்திற்கு திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களும் கலந்து கொண்டார்கள்.



1981-இல் சேலம் மாவட்டத்தில் நடந்த முதல் மாநாடே பொன்விழா மாநாடாக இருந்தது அந்த மாவட்டத்திற்கு பெருமை சேர்த்ததாகும். அம்மாநாட்டு விழா மலர்குழு உருவாக்கப்பட்டு பத்மஸ்ரீ. எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் தலைவராகவும், துணைத்தலைவராக திரு. ஜெ. சுத்தானந்தன் அவர்களும் திரு. அ. சங்கரன் முதலியாரும் இருந்து செயல்பட்டவிதம் மிகச்சிறப்புடையது. மாநாட்டிற்காக திரு. அ. சங்கரன் முதலியார் பெருமளவில் நிதி கொடுத்ததோடு நிற்காமல் தனது வழக்கறிஞர் தொழிலில் அதிகமான வேலை இருந்த போதும் சமுதாய மாநாட்டிற்காக இரவு பகல் பாராது கடுமையாக உழைத்தது பதிவில் உள்ளது. சேலம் வழக்கறிஞர் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் ஸ்ரீமதி உண்ணாமலை அம்மையார் தம்பதியருக்கு மூன்றாவது மகனாக 1941-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 23-ந் தேதி பிறந்தவர் நமது நீதியரசர். பள்ளி படிப்பை உள்ளூர் அரசினர் பள்ளியில் தமிழ் வழி கல்வியை தொடர்ந்தார். கணக்கு மற்றும் அறிவியல் பாடங்களை வகுப்பெடுத்த திரு. லக்ஷ்மனராவ் ஆசிரியர் ஒழுக்கத்தை சொல்லி கொடுத்தவர். பாடம் சம்மந்தமாக எழுதும் எழுத்து சுத்தமாகவும், அழகாகவும் இருக்க கற்று கொடுத்தவர் என்றால் மிகையாகாது.

அது பின்னாளில் எழுதுவதை சுத்தமாக எழுத உதவியது. அதன் பிறகு லிட்டில் பிளவர் பள்ளிக்கு ஆங்கில வழி கல்விக்கு மாறியது தனிக் கதை. அந்த பள்ளியின் தலைமை ஆசிரியர் புஷ்பநாதன் அவரது நாற்காலியில் உட்காரவே மாட்டார் சுற்றி சுற்றி வந்து கொண்டே இருப்பார்.

அவரிடம் கற்றது எதையும் நாம் நேராக நமது பார்வையில் இருக்குமாறு பார்த்துக்கொள்வதே சிறப்பு என்பதை போதித்தவர். 1958-இல் எஸ்.எஸ்.எல்.சி. படிப்பை முடித்து, அதன்பிறகு இரண்டு வருட இன்டர்மீடியட் படிப்பு ரத்து செய்த

பின்பு பி.யு.சி. ஆரம்பித்த இரண்டாவது பேட்ஜில் படித்த பெருமைக்கு சொந்தக்காரராக இருந்தவர்.

ஒரு வழியாக பி.யு.சி. தேர்ச்சி அடைந்தபோது திரு. சங்கரன் முதலியார் அவர்கள் தன் மகனை டாக்டருக்கு படிக்க வைக்க ஆசைப்பட்டார். மகனுக்கு இன்ஜினீயரிங் படிக்க ஆசை என்ன செய்வது என யோசித்து மருத்துவம் மற்றும் இன்ஜினீயரிங் இரண்டுக்கும் மனு போட்டு காத்திருக்கும் போது சென்னை மாநில கல்லூரிக்கு எதற்கும் இருக்கட்டும் என **B.A. (ECONOMICS)** படிப்புக்கு மனு செய்தார். கடைசியில் மருத்துவம் மற்றும் இன்ஜினீயரிங் கிடைக்காமல் மாநில கல்லூரியில் மனு செய்த **B.A. (ECONOMICS)** படிக்க அனுமதி கிடைத்தது. தமிழ் துறை பேராசிரியர் **(FULL COAT SUIT)** போட்டபடி தான் வகுப்பெடுக்க வருவார். அவரது தோற்றமும் ஒழுக்கமும் **(DRESS SENSE)** பற்றிய விழிப்புணர்வும் ஒழுக்கமும் கற்று தந்தது.

பொருளாதார துறை தலைமை பேராசிரியர் திரு. வேலாயுதம் அவர்கள் தனது தந்தை திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களின் நெருங்கிய நண்பர் என்பதால் தன் வகுப்பு இல்லாத நேரங்களிலும் திரு. ச. ஜெகதீசன் அவர்களை பற்றி விசாரித்து கொண்டே இருப்பார். மெதுவாக **B.A.** முடித்து 1962-இல் சட்ட கல்லூரியில் சேர்ந்தார். இரண்டு வருட படிப்பு கவனமாக படித்து தேர்ச்சி பெற்றார்.

இருமனம் ஒத்து திருமணம் என்பார்கள் மாமன் மகள் ஸ்ரீமதி மோகனா அவர்களை கரம் பிடித்தார். கரம் பிடித்ததினால் வாழ்க்கை ஒளிமயமாகியதே பொன்னை மணந்ததனால் சபையில் புகழும் வளர்ந்ததே கால சுமைதாங்கி என மார்பில் இவரை தாங்கி வாழும் கலை தந்த இன்பம், இவரை பேதமைகொள்ள செய்ததே, இவர் தேவையை யார் அறிவார் என்றால் ஸ்ரீமதியே அறிவார்.



**ஸ்ரீமதி மோகனா** அவர்களை கரம் பற்றிய நாள் **14-09-1967**

நீதியரசருக்கு இரண்டு மகள்களும் ஒரு மகன், **வித்யா** மூத்தவள் **நித்தியா** இளையவள், மகன் **செந்தில்** ஆவார்கள் முறையே மூவருக்கும் திருமணமாகிவிட்டது.



**வித்யா** அவரது கணவர் **பிரபாகர்** இருவரும் அமெரிக்காவில் வாழ்கின்றனர்



இளைய மகள் **நித்தியா** அவரது கணவர் **சிட்டிபாபு** சென்னையில் புகழ்பெற்ற அக்ஷயா அடுக்கு மாடி குடியிருப்புகளை கட்டும் நிறுவனத்தை நடத்தி வருகிறார்கள்.



மகன் **செந்தில்** அவரது மனைவி **கீர்த்தி** இருவரும் வழக்கறிஞர்கள் டெல்லியில் தங்கி வழக்கறிஞர் தொழிலை செய்து வருகிறார்.



மகன் செந்திலின் திருமணத்திற்கான அனைத்து காரியங்களையும் முன்னின்று தங்கள் வீட்டு திருமணம் போல செயல்பட்டவர். நாளைய நீதிமன்ற நீதிபதியாக வாய்ப்புள்ள ஒரே செங்குந்தர் மாண்புமிகு **திரு. சுதாகர்** அவர்கள் மற்றும் அவரது மனைவி **ஸ்ரீமதி மகாலட்சுமி சுதாகர்** அவர்கள்.

குடியாத்தம் திருவள்ளுவர் உயர்நிலைப்பள்ளியின் தாளாளர். திருமிகு. K.M. கோவிந்தராஜ முதலியாரின் மகன் வழி பேத்தியாவர் என்பது சிறப்பு.

1962-இல் சென்னை சட்ட கல்லூரியில் இடம் கிடைத்து சேர்ந்தார். அக்காலத்தில் அரசியல் ஆர்வமிகுதியாக உள்ளவர்கள் சட்டம் படித்தால் நன்றாக இருக்கும் என பலர் படித்தார்கள். இன்றைய அரசியல் மட்டத்தில் நிறைய நண்பர்கள் அதன் மூலம் இருப்பது தனிக் கதை.

திரு. ச.ஜெகதீசன் அவர்களுக்கு அரசியலில் ஆர்வமில்லை சட்டக்கல்லூரி கோடை விடுமுறைக்கு சேலம் வந்தால் தனது தந்தை திரு. அ. சங்கரன் அலுவலகத்தில் நடப்பதை கூர்ந்து கவனித்து வந்தார்.

அவசர நேரத்தில் ஜுனியர் வராத சமயத்தில் தந்தை டிக்டேட் செய்வதை எழுத வைத்தும் சமயங்களில் இதுதான் செய்தி நீயே எழுது என சொல்லியதும் அவருக்கு வழக்கறிஞர் தொழில் மீது ஆர்வம் அதிகம் வந்தது. இதில் முக்கியமாக **DRAFTING** எனப்படும் சட்ட ரீதியாக எழுதும் முறையில் நல்ல பயிற்சி கிடைத்தது.

ஒருவறாக 1964-இல் படிப்பு முடிந்து ரிசல்டும் நல்ல மார்க்கோடு பாஸ் செய்துவிட்டார். குழப்பம் தந்தைக்கு, மகனை மேற்கொண்டு என்ன செய்வது என்பதால் ஏற்கனவே மாண்புமிகு நீதியரசர். திரு. வீராசாமியிடம் பேசியவாறு சென்னைக்கு அனுப்பி வைத்தார். அவரது பரிந்துரையை ஏற்ற சீனியர் வழக்கறிஞர் திரு. வி.ராமசாமி அவர்களிடம் ஜுனியராக சேர்ந்தார். சட்டக்கல்லூரியில் பின்னாளில் உச்ச நீதிமன்ற நீதிபதியாக பதவி பெற்ற மாண்புமிகு நீதியரசர். எஸ். மோகன் அவர்கள் ஆசிரியராக பெற்றதில் பெருமைகொண்டார்.

ஒரு வழக்கறிஞராக ஆக வேண்டும் என்றால் முதலில் கிளர்க்காக வேலை செய்ய வேண்டும் என வழக்கறிஞர் திரு. வி. ராமசாமி கூறியதை ஏற்று அவர் செய்ய சொல்லும் அனைத்து கோர்ட் சம்மந்தமான பணிகளையும் செவ்வனே செய்து முடித்தார்.

பின்னாளில் திரு. வி. ராமசாமி அவர்கள் பப்ளிக் பிராசிக்யூட்டராக நியமிக்கப்பட்டார். நீதி துறையில் அரசாங்க பிளீடர், பப்ளிக் பிராசிக்யூட்டர் என இரண்டு பதவிகள் உண்டு ரிட் மனுக்கள், சிவில் வழக்குகள் கவனிக்க கவர்மெண்ட் பிளீடர், கிரிமினல் வழக்குகளை கவனிக்க பப்ளிக் பிராசிக்யூட்டர் என இரண்டாக பிரிக்கலாம்.

திரு. ச. ஜெகதீசன் அவர்கள் தனது தந்தையைப் போலவே சிவில் மற்றும் கிரிமினல் என இரண்டு துறைகளிலும் சிறந்து விளங்கினார். 17-09-1964 இல் தன்னை பார் கவுன்சில் மெம்பராக பதிவு செய்து கொண்டார். வழக்கறிஞராக தொடர்ந்து பணியாற்றி வரும் காலத்தில் தனது சீனியர் திரு. வி.ராமசாமி அவர்கள் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக அறிவிக்கப்பட்ட பின்பு தனி வழக்கறிஞராக சுதந்திரமாக கோர்ட்டுக்கு செல்லும் வாய்ப்பு உருவானது. அதற்குள் சீனியர் வழக்கறிஞர் திரு. பராசரன் அவர்களின் சென்னை அலுவலகத்தில் மீண்டும் மூன்றரை ஆண்டுகள் சென்னையில் பணியாற்றும் வாய்ப்பு 1976-இல் திரு. பராசரன் அட்வகேட் ஜெனரல் ஆனார்.



**திரு. பராசரன்** சீனியர் வழக்கறிஞர் அவர்களுடன்

அக்காலத்தில் திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கும் ஓர் அரசாங்க பதவி கிடைத்தது. வீட்டு வசதி வாரிய சட்ட ஆலோசகர் பதவி அவருடன் பின்னாளில் உயர்நீதிமன்ற நீதிபதியான திரு. கே.பி.சிவசுப்ரமண்யமும் சட்ட ஆலோசகராக நியமிக்கப்பட்டார்.

அன்றைய வீட்டுவசதி வாரியத்தின் தலைவராக திரு. சுப்ரமண்யம் ஐ.ஏ.எஸ். அவர்கள் இருந்தார்கள். அண்ணா நகர், அசோக் நகர் வீட்டு வசதி வாரியம் நிர்ணயித்த தொகையை 15 ஆண்டுகளாக கட்டி வருபவர்களை துன்புறுத்தும் வகையில் ஏற்கனவே நிர்ணயித்த விலையை அதிகப்படுத்தியது இதனை எதிர்த்து உரிமையாளர்கள் கோர்ட் படி ஏறினார்கள் இவற்றுக்கு திரு. கே.பி.சிவசுப்ரமண்யம் அவர்கள், ஏனோ திரு. ச. ஜெகதீசன் அவர்கள், மீது நம்பிக்கை இழப்பதாக கூறியதை கேட்டு தனது சட்ட ஆலோசகர் பதவியை 1978-இல் ராஜினாமா செய்தார்.

1980 வரை தனது வாத திறமையை உலகிற்கு சுதந்திரமாக ஒரு திறமை வாய்ந்த வழக்கறிஞராக வாதங்களை எடுத்து காட்டிய விதத்தில் 1980-இல் அரசு வழக்கறிஞராக நியமிக்கப்பட்டார். அதன் பிறகு அரசாங்கத்திற்கு ஆதரவாக பல வழக்குகள் அதில் முக்கியமாக தமிழ் பல்கலைக்கழக ஊழியர்களுக்கு வீடு கட்டித்தர நில ஆர்ஜித வழக்கு, நடைபாதை சாரிகள் சகட்டு மேனிக்கு கடை போடுவதை எதிர்த்த வழக்கு, தேனி முனிசிபாலிட்டி ஊழியர்களுக்கு வீடு கட்டி தருவது சம்மந்தமான வழக்கு.

அதே போல திருநெல்வேலி மது விற்பனைக்கு மனு செய்த இருவருக்கும் அனுமதி பெற்று தந்ததால் மது விலக்கு ஆயத்தீர்வை கமிஷ்னர் பேசிய விதம் பிடிக்காமல் அன்றே தனது அரசாங்க வழக்கறிஞர் பதவியை ராஜினாமா செய்ததற்கு காரணம் உணர்ச்சியல்ல தன்மானப்பிரச்சனை வளைந்து கொடுக்காத தன்மையே காரணம் என்றால் மிகையாகாது. அன்றைய அமைச்சர் திரு. பொன்னையன் அவர்கள், எவ்வளவோ கேட்டும் தனது உறுதியிலிருந்து பின்வாங்காமல் இருந்தார். திரு. ச. ஜெகதீசன் அவர்களை இழக்க விரும்பாமல் காலத்தை தாமதித்தால் அவர் மனம் மாறலாம் என காத்திருந்து அவரது மன உறுதியுடன் உள்ளதை அறிந்து அவர் மாறவில்லை என கடைசியாக வேறு வழியில்லாமல் ராஜினாமா கடிதத்தை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இனி அரசு வழக்கறிஞராகவும், தனியே சுதந்திரமாகவும் பெற்ற அனுபவங்கள் திரு. ச. ஜெகதீசன் அவர்களை, செம்மைபடுத்திக் கொண்டு வந்தன. தன் திறமையான வாதத்திலும் வழக்கை வெற்றி பாதைக்கு கொண்டு போவதிலும் மிகச் சிறப்பாக செயல்பட்டார்.



இவரது தந்தை அலுவலகத்திலிருந்தது போலவே இவரது அலுவலகத்திலும் பத்துக்கும் மேற்பட்ட வழக்கறிஞர்கள் ஜூனியர்களாக இருந்தனர். அதில் முக்கியமாக திரு. ரவிராஜ்பாண்டியன் அவர்களும், திரு. ரமேஷ் அவர்களும், உயர் நீதி மன்ற நீதியரசர்களாக உயர்ந்தார்கள் என்பது திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்துள்ளது.

திருவாளர்கள். ரமேஷ், ராஜசேகர், ரவிராஜ்பாண்டியன், மதிவாணன், ஜீவானந்தம், சிவகுமார் போன்றோர்கள் இவரிடம் பெற்ற அனுபவத்தில் பின்னாளில் சிறந்து விளங்கிய இவரது ஜூனியர்கள் ஆவர்.

திரு. ஜீவானந்தனம் அவர்கள் இன்றைய நாளில் ஓசூர் மாவட்ட நீதிமன்றத்தில் பப்ளிக் பிராசிக்யூட்டராக இருக்கிறார் என்பது சிறப்பாகும். திரு. ச. ஜெகதீசன் அவர்களின் தீர்க்கமான வாதத்திறமைக்கு அவர் கூறும் சில டிப்ஸ்களும் உண்டு. அதிலொன்று ஒரு வழக்கை படிப்பதற்கு முன் அந்த வழக்கை கையாளப் போகும் நீதிபதியின் மனப்போக்கை படி என்பதாகும்.

ஒரு நீதிபதியின் பார்வை எப்படியிருக்கும் என புரிந்து கொள்ளும் வழிமுறைகளை கற்க வேண்டும். வெவ்வேறு நீதிபதிகளின் மணநிலை வெவ்வேறாக இருக்கும் சிலரிடம் கருணை இருக்கும், சிலரிடம் கண்டிப்பு இருக்கும், சிலரிடம் உண்மையிருக்கிறதா என ஆராயும் குணமிருக்கும் என்பதை நன்கு உணர்ந்து தன் வாத திறமையால் பல வழக்குகளை கையாண்டு வெற்றி பெற்றவர் திரு. ச. ஜெகதீசன் அவர்கள் என்றால் மிகையாகாது.

திரு. ச. ஜெகதீசன் அவர்கள் சட்டத்தை பற்றி கூறும்போது சட்டத்தை சற்று வளைக்கலாமே தவிர அதை முறித்துவிட முடியாது சமுதாயத்திற்காகத்தான் சட்டம், சமுதாயத்திற்கு ஒரு மாற்றம் அவசியமென்றால் அந்த மாற்றத்தை கொண்டு வரும் வகையில் சட்டத்தை சாதகமாக மாற்றுவதில் தவறில்லை என்பதாகும்.

தனது தந்தையின் 75-வது பிறந்த நாளை வெகு விமர்சையாக கொண்டாடியவர் அன்றைய அமைச்சர். திரு. க. இராஜாராம் அவர்கள், சேலத்தில் இருக்கும்போது திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களை சந்திக்காமல் இருந்ததில்லை. இருவருக்குள்ளும் அப்படியொரு நட்பு நிறைந்திருந்தது.

அண்ணார் 1986-இல் தனது 75-வது வயதில் இறைவன் பாதத்தில் தஞ்சமடைந்தார். திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் தனது 75-ஆம் வயதில் மறைந்தது மகன் திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கு மிகப் பெரிய இழப்பாகும்.



திரு. ச. ஜெகதீசன் வழக்கறிஞராக மை லார்ட் என அவர் அழைத்த காலம் போய் அவரை மை லார்ட் என அழைக்கப்பட்ட காலமாய் அது மலர்ந்ததை இனி பார்ப்போம்.

1993-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஒரு நாள் சென்னை உயர்நீதிமன்ற மாண்புமிகு தலைமை நீதிபதி. திரு. கே. ஏ. சுவாமி அவர்கள் திரு. ச. ஜெகதீசன் அவர்களிடம் உங்களது பயோ டேட்டாவை தர வேண்டும் தங்களை நீதிபதி பதவிக்கு பரிந்தரை செய்ய விரும்புகிறேன் என்றார்.

திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கு சற்று தயக்கம் எல்லா வழக்கறிஞர்களும் நட்புடன் நன்றாக பழகி கொண்டு இருப்பது சந்தோஷமாக உள்ளது. நீதிபதியாகிவிட்டால் அவர்கள் முன்போல பழக அச்சம் கொள்வார்கள் என எண்ணி இரண்டு மாதமாக தீவிரமாக யோசித்து தனது பயோ டேட்டாவை தராமல் இருந்தார். மூன்று மாதங்கள் கழித்து மீண்டும் மாண்புமிகு. தலைமை நீதிபதி தங்களின் பயோ டேட்டாவை கேட்டேன் தராதது ஏன் என கேட்டார்.

திரு. ச. ஜெகதீசன் அவர்கள் தனது நட்பு வட்டாரம் குறித்து தகவல் தந்ததோடு நீதிபதியாகிவிட்டால் தேவையில்லாத விமர்சனங்களுக்கு ஆளாக நேரிடும் என தனது எண்ணத்தை வெளிப்படுத்தினார். தலைமை நீதிபதி மாண்புமிகு. திரு. கே. ஏ. சுவாமி இதுவரை உங்கள் ரெக்கார்டு மிஸ்டர் கிளீன் என இருப்பதால்தான் உங்களை சிபாரிசு செய்ய விரும்புகிறேன் என்றார்.

இவருக்கு சற்று தயக்கமிருந்தாலும் இவரது நலனில் மிகுந்த அக்கரை கொண்டவருமான அட்வகேட் ஜெனரல் திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி அவர்களால்

சம்மதம் தெரிவிக்க வேண்டிய கட்டாயம். நான்கு மாதங்களாக எந்த தகவலும் வராததால் நான் அதிலிருந்து விலகிக் கொள்ளலாம் என்றிருக்கிறேன் என தலைமை நீதிபதியிடம் கூறினார்.

அதன் பிறகுதான் திரு. ச. ஜெகதீசன் அவர்களின் வாத திறமைக்காகவும் அறிவாற்றலுக்கும் நேர்மைக்காகவும் அன்றைய நாளில் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதிகளாக இருந்த மாண்புமிகு நீதியரசர்கள் திரு. கே. வெங்கடசாமி அவர்கள், திரு. கே. எஸ். பக்தவச்சலம் அவர்கள், திரு. எம். சீனிவாசன் அவர்கள், திரு. ராஜு அவர்கள், அனைவருமே திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கு பரிந்துரை செய்தது தெரிந்து ஒப்புக்கொண்டார்.

உச்சநீதி மன்றத்தில் பரிந்துரை செய்யப்பட்ட ஆறு நபர்களையும் ஏற்றுக்கொண்டார்கள் என தகவல் திரு. ச. ஜெகதீசன் அவர்களை வந்து சேர்ந்தது, இருந்தும் உயர் நீதி மன்ற நீதிபதிகளை மாநிலம் விட்டு மாநிலம் மாற்றுவது நீதிமன்ற வழக்கம் என்பதால் திரு. ச. ஜெகதீசன் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்.

உச்ச நீதிமன்றத்தில் சென்னையிலிருந்து பரிந்துரைக்கப்பட்ட ஆறு நீதிபதிகளுக்கு ஒப்புதலை கொடுத்து மத்திய அரசுக்கு அனுப்பி வைத்தது. அந்த முடிவுகளை நான்கு மாதங்களாக கிடப்பில் மத்திய அரசு வைத்திருந்ததால் மீண்டும் ஒரு குழப்பத்தில் ஆழ்ந்தார்.

தலைமை நீதியரசரை சந்தித்து இந்த ஏற்பாடு சரி வராது போல தெரிவதால் நான் அதிலிருந்து விலகிக் கொள்ளலாம் என்றிருக்கிறேன் என தெரிவித்தார்.

அதோடு நீதிபதிகளை மாநிலம் விட்டு மாநிலம் மாற்றும் வழக்கம் உள்ளதால் சென்னையை விட்டு செல்ல விருப்பமில்லை என்பது கூட காரணம் என்றும் நீதிபதியாக பதவி ஏற்றபின் மறுப்பு சொல்வது நீதிமன்ற நடைமுறைக்கு பொருந்தாமல் போகும் என தெரிவித்தார்.

பிறகு சரி நான் உச்ச நீதிமன்ற நீதிபதியிடம் பேசுகிறேன் என கூறினார். உண்மையில் திரு. ச. ஜெகதீசன் அவர்களை நீதி துறை இழக்க முடியாது என மனதிலே எண்ணத்தை வைத்து கொண்டு உச்ச நீதிமன்ற தலைமை நீதியரசரிடம் விவரத்தை சென்னை உயர் நீதிமன்ற தலைமை நீதிபதி மாண்புமிகு. கே. ஏ. சுவாமி அவர்கள் கூறினார். அதன் பிறகு உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி அவர்கள் உயர் நீதிமன்ற தலைமை நீதிபதியிடம், என்னிடம் தொலைபேசியில் திரு. ச. ஜெகதீசன் மற்றும் அவரது மனைவியையும் பேச சொல்லுங்கள் என தெரிவித்தார்.

உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதியின் அழைப்பை நிராகரிக்க மனமில்லாமல் பேச ஒப்புக்கொண்டு 14-10-1994 அன்று காலை சென்னை உயர் நீதிமன்ற தலைமை நீதிபதியின் வீட்டிற்கு தனது மனைவி ஸ்ரீமதி மோகனாவுடன் காலை 6.30 மணிக்கு சென்றார்.

தலைமை நீதிபதி மாண்புமிகு கே.ஏ. சுவாமி அவர்கள் கொடுத்த தேனீரை பருகியபின் உச்ச நீதிமன்ற தலைமை நீதியரசரிடம் தொலைபேசியில் பேச வழி செய்து முதலில் உச்ச நீதிமன்ற நீதிபதி அவர்கள் திருமதி. மோகனா ஜெகதீசன் அவர்களிடம் என்ன காரணத்தால் திரு. ச. ஜெகதீசன் அவர்கள் நீதிபதியாக தயங்குகிறார் என கேட்க, இரண்டு முக்கிய காரணங்கள் அவை முறையே எனது மகன் திரு. செந்தில் பெங்களூரில் சட்டம் பயின்று வருகிறார். அவரது எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டும். அதோடு அவர் நீதிபதியாக பதவி ஏற்க ஒப்புக்கொண்டால் இந்தியா முழுவதும் மாற்றல் எங்கு வேண்டுமானாலும் இருக்கும் அதை நிராகரிக்க முடியாது.

இதற்கிடையில் மத்திய அரசு சென்னை உயர் நீதிமன்றம் பரிந்துரைத்து உச்ச நீதிமன்றத்தில் ஒப்புதல் வழங்கியதை ஏற்று ஆறு நபர்களையும் நீதிபதிகளாக அறிவித்தது.

அவரை பொறுத்த வரை சென்னை உயர் நீதிமன்றத்திலேயே இருக்க வேண்டும் என்பது இரண்டாவது காரணம் என்றவுடன் உச்ச நீதிமன்ற தலைமை நீதியரசர் கவலையே வேண்டாம் இந்த ஆண்டிற்குள்ளாக நான் ஓய்வு பெறுவதால் உங்கள் மகனை நீங்கள் விரும்பும் டெல்லியில் உள்ள உச்சநீதிமன்ற சீனியர் வழக்கறிஞரிடம் ஜூனியராக சேர்த்து விடுகிறேன் அந்த பொறுப்பை நானே ஏற்றுக்கொள்கிறேன் என்றார்.

இரண்டாவதாக அவர் சென்னை உயர்நீதி மன்றத்திலேயே இருக்குமாறு செய்துவிடுகிறேன் என்று கூறியதை கேட்டு மிகுந்த மகிழ்ச்சி அடைந்த இருவரும் உச்ச நீதிமன்ற தலைமை நீதியரசருக்கு நன்றியை காணிக்கையாக்கி விடைபெற்றனர். வழக்கறிஞர் திரு. ச. ஜெகதீசன் அவர்கள், சென்னை உயர் நீதி மன்றத்தில் மாண்புமிகு நீதியரசர் ச. ஜெகதீசன் அவர்களாக மாறினார்.

இதில் ஒன்று குறிப்பிட வேண்டும். சேலம் வழக்கறிஞராக பதினைந்துக்கும் அதிகமான ஜுனியர்களை தன் அலுவலகத்தில் பணிபுரிந்த சேலத்திலேயே சிறந்து விளங்கியவர் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் வழக்கறிஞரின் மகன் திரு. ச. ஜெகதீசன் அவர்களை பற்றிய கவலை.



திரு. சங்கரன் முதலியார் தனது மகன் சட்டம் படித்து முடிக்கும் முன் என்ன மாதிரி தவிப்போடு தனது நெருங்கிய நண்பர் நீதியரசர் திரு. வீராசாமியின் ஆலோசனைப்படி சென்னைக்கு திரு. ராமசாமி அவர்களிடம் ஜுனியராக அனுப்பிய பின் சந்தோஷம் அடைந்தாரோ, அது போல திரு. ச. ஜெகதீசன் அவர்களும் தன் மகன் செந்தில் அவர்களின் எதிர்காலத்திற்காக நீதிபதி பதவியே வேண்டாம் என நினைத்தவருக்கு உச்ச நீதிமன்ற நீதிபதியின் ஆறுதலான வார்த்தையின் போது தான் தனக்காக தனது தந்தையின் தவிப்பை உணர முடிந்தது என்றால் மிகையாகாது.

சென்னை உயர் நீதிமன்றத்தில் தலைமை நீதியரசரின் சேம்பரில் பதவி பிரமாணம் எடுத்த நொடிப் பொழுதில் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியானார். மாண்புமிகு. நீதியரசர். ச. ஜெகதீசன் அவர்கள் பதவி ஏற்று மற்ற ஐவரையும் அனுப்பிய பின் தலைமை நீதிபதி **Mr. JAGADEESAN** நீங்கள் மட்டும் இருக்கவும் உங்களிடம் கொஞ்சம் பேசவேண்டும் என கூறினார். தலைமை நீதிபதி மாண்புமிகு. ச. ஜெகதீசன் அவர்களிடம் உங்களுக்கு நண்பர்கள் வட்டாரம் அதிகம் எனவே அவற்றை குறைத்துக்கொள்ளுங்கள் தேவையற்ற சர்ச்சைகளை தவிர்க்கலாம் என்றார்.

மாண்புமிகு. நீதியரசர் நான் நேர்மையின் சிகரமான சேலம். திரு. ச. சங்கரன் முதலியார் என்கிற வழக்கறிஞரின் மகன் என்னை எனது தாயார் திருமதி. உண்ணாமலை அம்மையார் ஒழுக்கத்தையும், நேர்மையையும் கற்று தந்து அவற்றை வாழ்நாள் முழுவதும் எவ்வாறு கடைபிடிக்க வேண்டும் என சொல்லி வளர்த்து உள்ளார்கள் எனவே எந் சூழ்நிலையிலும் தர்மத்திலிருந்து

விலகமாட்டேன் நீதி தவற மாட்டேன் என கூறியதை கேட்ட தலைமை நீதிபதி தனது மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்.

சேலத்து சிங்கம் திரு. அ.சங்கரன் முதலியார் வழக்கறிஞர்களிடம் அன்றைய நாளில் பதினைந்துக்கும் மேற்பட்ட ஜுனியர்கள் இருந்தனர். அவர்களில் பலர் சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதிபதிகளாக பதவி உயர்வு பெற்றனர். அதில் ஒருவர் உச்ச நீதிமன்ற நீதிபதியாகவும் ஆனார். தந்தையை போலவே திரு. ச. ஜெகதீசன் வழக்கறிஞர் அலுவலகத்தில் பத்துக்கும் மேற்பட்ட ஜுனியர்கள் இருந்து அதில் இரண்டுபேர் உயர் நீதிமன்ற நீதிபதிகளாகினர்.

மாணவ பருவத்தில் திரு. ச. ஜெகதீசன் அவர்கள் சட்ட கல்லூரியில் பயிலும்போது உடன் படித்தவர்கள் இன்று தமிழகம், டெல்லி என பலர் மிகப்பெரிய அளவில் அரசியலில், அதிகாரத்தில் இன்றும் உள்ளனர். அவர்கள் அனைவரும் விரும்பும் மனிதராக இன்றளவும் நமது நீதியரசர் மாண்புமிகு. திரு. ச. ஜெகதீசன் அவர்கள் இருக்கிறார். இவரது தைரியத்தை குறைவாக மதிப்பிட்டு இன்று நமது இனத்திலேயே கூட சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுக்காக இவரது தைரியத்தை, தர்மத்தை நேர்மையை மட்டும் விவரமான பதிவுகளாக தெரிவித்தார்.

நீதிபதியாக பதவி ஏற்றபின் மாண்புமிகு நீதிபதி. திரு. எம். சீனுவாசன் அவர்களுடன் முதன் முதலாக வழக்கறிஞராக இருந்த நீதியரசராக பணி உயர்நீதி மன்றத்தில் நீதிபதி ஆசனத்தில் அமர்ந்தார். நான்கு நாட்கள் அமர்வுக்குப்பின் தனி நீதிபதியாக அமர வேண்டிய சூழல் உருவானது அதனை சிங்கிள் சிட்டிங் என்பார்கள். நீதிபதி. திரு. எம். சீனுவாசன் அவர்களின் வாழ்த்துக்களுடன் சிவில் அட்மிஷன் கோர்ட்டில் தனியமர்வு மூன்று வாரங்கள் அது தொடர்ந்தது கொடைக்கானல் பிளசன்ட் ஸ்டே வழக்கு வந்தது.

அதில் மீண்டும் நீதிபதி. திரு. எம். சீனுவாசன் அவர்களுடன் வழக்கை விசாரிக்கும் சூழல் உருவானது.

அன்றைய சர்வ வல்லமை பொருந்திய யாராலும் கிட்ட நெருங்க முடியாத நபராக சிம்மசொப்பனமாக விளங்கிய மாண்புமிகு முன்னாள் முதல்வர். செல்வி. ஜெ. ஜெயலலிதா அவர்களால் ஒப்புதல் தரப்பட்ட பிளசன்ட் ஸ்டே ஓட்டல் வழக்கு மாண்புமிகு நீதியரசர். சீனுவாசன் மற்றும் மாண்புமிகு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் சேர்ந்த ஸ்பெஷல் பெஞ்ச் முன் விசாரணைக்கு வந்தது

இந்த வழக்கில் ஊடகங்கள் மூலமாக நல்ல விளம்பரம் நமது நீதியரசருக்கு கிடைத்தது. அம்மையார் மாண்புமிகு. செல்வி. ஜெ. ஜெயலலிதா அவர்கள் ஆட்சியில் எந்த விதிமுறைகளையும் கடை பிடிக்காமல் காற்றில் பறக்கவிட்டு கட்டப்பட்ட ஓட்டல். ஆட்சியிலிருந்தவர்கள் எந்த விதியையும் பார்க்காமல் ஓட்டலை கட்ட அனுமதி தந்திருந்தார்கள்.

இவற்றை அனைத்தையும் நன்றாக தெரிந்து கொண்ட நேர்மையின் சின்னமாக இருந்தவர் நமது மாண்புமிகு நீதியரசர். திரு. ச. ஜெகதீசன் அவர்கள், அன்றைய தினத்தில் மிகப்பெரிய பலத்துடன் ஆட்சி புரிந்தவர் கொடுத்த அல்லது சலுகை காட்டி ஓட்டலை கட்ட அனுமதித்ததை அறிந்து நீதிபதி. திரு. எம். சீனுவாசன் அவர்களுடன் இணைந்து எந்த விதிமுறையும் கடைபிடிக்காமல் கட்டிய ஓட்டலை இடிக்க ஆணை பிறப்பித்ததோடு நிற்காமல் அன்றைய தமிழக அரசுக்கு கடும் கண்டனத்தையும் பதிவு செய்து தீர்ப்பை வழங்கினார்கள்.

இவர்கள் இருவரும் வழங்கிய தீர்ப்பை எதிர்த்து ஓட்டல் உரிமையாளர் உச்ச நீதிமன்றத்திற்கு சென்றார். சென்னை உயர் நீதிமன்றம் கொடுத்த தீர்ப்பை உறுதி செய்தது. உச்ச நீதிமன்றம் அவ்வளவு தெளிவாக தனது தீர்ப்பை வழங்கியிருந்தார் நமது நீதியரசர் விதிமுறைகளை காற்றில் பறக்கவிட்டு கட்டிய கொடைக்கானல் பிளசன்ட் ஸ்டே ஓட்டல் இடிக்கப்பட்டது.

அமரும் நாற்காலிக்கு தகுதியுள்ளவராக்கி பதவியில் துணிந்து செயல்பட்டு வெற்றிகண்டார் என்பதற்கு ஒரு உதாரணமாக இந்த வழக்கை கையாண்டு தீர்ப்பு வழங்கியதை கூறலாம்.

இவர் கையாண்ட வழக்குகள் ஏராளம் அதில் சில முக்கிய வழக்குகளை மட்டும் விளக்கமாக பதிவிட விரும்புகிறார். நீதிபதியாக ஆசனத்தில் அமர்ந்து விடும் நீதியரசர்களுக்கு விமர்சனங்களுக்கு பஞ்சமிருக்காது. இவர் ஒரு சாராருக்கு சாதகமாக இருக்கிறார். ஐயர் இனத்தவருக்கு எதிராக இருக்கிறார் என எதையாவது பழி சொல் பேசுவதில் வழக்கறிஞர்கள் சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள்.

ஒரு தனி நபர் வழக்கு வந்தால் இரண்டு வழக்கறிஞர்கள் வாதிட நேரும் போது உண்மை யாரிடம் என்பதை அறிந்து சட்டத்திற்கு கட்டுப்பட்டு தீர்ப்பு சொன்னால் இரண்டு வழக்கறிஞர்களில் ஒருவர் மட்டுமே வெற்றி பெற முடியும் என தெரிந்தும் அவதூறுகளை பரப்புவதை ஒரு சில வழக்கறிஞர்கள் மட்டும் வாடிக்கையாக கொண்டு செயல்படுவார்கள்.

டிவிஷனல் பெஞ்சில் போடாமல் ஜூனியரை தனியமர்வு நீதிபதயாக அமர்த்தினார். மேலும் ரிட் அட்மிஷன்ஸ், சிவில் அட்மிஷன்ஸ் போன்ற முக்கிய பிரிவில் அமர்த்தினார். மூன்று ஆண்டுகள் அப்பொறுப்பில் இருந்தவர் பின்னர் ரிட் அட்மிஷன்ஸ் நீதிபதியாக நமது நீதியரசர் பொறுப்பேற்றார்.

இப்படி வந்த வழக்குகளில் திரு. ஜெ. சுதர்சன் வழக்கு மிக முக்கியமானது. இவர் ஒரு போலி வழக்கறிஞராக செயல்பட்டார் என்பதை தனது திறமையால் அறிந்து கொண்டார்.

நமது நீதியரசர் இவர் மீது பல வழக்குகள் நிலுவையில் இருந்தது. இப்படிப்பட்ட நபர் சட்டத்தின் பிடியிலிருந்து தப்பி விடக்கூடாது என்பதில் தீவிரமாக இருந்தார். இந்திய அரசியலமைப்பு சட்டத்தின்படி 226-ஆம் விதியின்படி போலி கையெழுத்து மோசடி ஆகியவற்றின் மீது நடவடிக்கை பாய்ந்தது. இந்த சட்டபிரிவு போலியாக கையெழுத்தை போட்டார்கள் என்பது நிரூபிக்கப்பட்டால் கடுமையான தண்டனை வழங்க சட்டம் இருப்பதால் ஒருவன் ஹை கோர்ட்டையே மோசடி செய்திருக்கும் நபரான திரு. ஜெ. சுதர்சனுக்கு மூன்றாண்டுகள் சிறை தண்டனை வழங்கினார்.

இது சென்னை உயர்நீதிமன்றத்தில் நடந்த ஒரு முக்கியமான வழக்கு இந்த வழக்கிற்கு பிறகுதான் வக்காலத்து தாக்கல் செய்யும் வழக்கறிஞரும் அட்டெஸ்ட் செய்யும் வழக்கறிஞரும் தங்களது பார்கவுன்சில் பதிவு எண்ணை வக்காலத்தில் குறிப்பிடும் வழக்கம் நடைமுறைக்கு வந்தது. இந்த பெருமை தனிப்பட்ட முறையில் நமது நீதியரசர். மாண்புமிகு. திரு. ச. ஜெகதீசன் அவர்களையே சாரும்.

அன்றைய முதல்வர் செல்வி. ஜெ. ஜெயலலிதா அவர்கள் நடத்திய வளர்ப்பு மகன் திருமணத்தை யாரும் மறந்திருக்க முடியாது. அந்த திருமணம் பல சர்ச்சைகளை தோற்றுவித்த திருமணம். அந்த திருமணத்திற்காக பிரம்மாண்டமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அடையாறு பிள்ளையார் கோவிலிலிருந்து ராஜா அண்ணாமலைபுரம் வரை மாப்பிள்ளை ஊர்வலம் என்பது அவர்களின் ஏற்பாடுகளில் ஒன்று பாதை முழுவதும் அலங்கார விளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன.

அந்த நிலையில் பொது நல வழக்கு ஒன்று தொடரப்பட்டது. ஆடம்பர விளக்குகள் அத்தனையும் அகற்றப்பட வேண்டும் அத்தனையும் மின்சார வாரியத்தின் அனுமதி பெறாமல் மெயின் லைனிலிருந்து மின்சாரம் எடுக்கப்பட்டுள்ளது என்கிற குற்றச்சாட்டும் இருந்தது. மனுதாரருக்கு ஆதரவாக

மூத்த வழக்கறிஞர் திரு. கோவிந்த் சுவாமிநாதன் ஆஜராகியிருந்தார். அரசு சார்பில் அட்வகேட் ஜெனரல் ஆஜராகிறார் வழக்கு நமது நீதியரசர். திரு. ச. ஜெகதீசன் அவர்கள் முன் விசாரனைக்கு வந்தது.

செல்வி. ஜெ. ஜெயலலிதா முன்னாள் முதல்வரின் வளர்ப்பு மகன் திருமண விழாவிற்கு அனுமதி பெறாமல் மின்சாரம் எடுக்கப்பட்டுள்ளது என்றும் அலங்கார விளக்குகளால் போக்குவரத்து கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளது என்கிற குற்ற முறையீட்டை மூன்று நாள் விவாதங்களில் கேட்கப்பட்டது. திருமண வீட்டார் வழக்கை கொடுத்தவுடன் அப்படி அனுமதி பெறாமல் எடுத்திருப்பது உடனடியாக நீக்கி முறையாக மின்சாரத்துறையிடம் அனுமதி பெற்றுள்ளதை அரசாங்க வழக்கறிஞர் தனது வாதத்தில் தெரிவித்திருந்தார்.

திருமண நாளுக்கு முந்தின நாள் மதியத்தோடு விசாரணை முடிந்து தீர்ப்பை ஒத்திவைக்கப்பட்டது. மனுதாரர் நீதியரசரின் சேம்பருக்குள் வந்து இன்றே தீர்ப்பு வழங்க வேண்டும் என வேண்டுகோள் வைத்தார். அவரிடம் வழக்கில் தங்கள் வாதங்களை வைப்பதோடு உங்கள் பணி முடிவடைந்துவிட்டது. தீர்ப்பை நான்தான் எப்பொழுது வழங்குவது என தீர்மானிக்க வேண்டும் என்றார்.

தனது தீர்ப்பில் திருமண நாளுக்கு அடுத்த நாள் அனைத்தும் அகற்றப்பட வேண்டும் என தெரிவித்தேன். விமர்சனங்கள் வந்தன திருமணம் முடிந்தவுடன் அவர்களாகவே எடுத்து விடுகிறார்கள் இதற்கு எதற்கு நீதிபதியின் தீர்ப்பு என பேசியவர்களுக்கு நான் வழங்கியதில் உள்ள ஞாயங்களை தெரிந்து கொள்ள போவதில்லை.

ஒருவேளை அன்றே தீர்ப்பை வழங்கி உடனடியாக அனைத்தும் அகற்றப்பட வேண்டும் என்று இருந்தால் எதிர் அணியினர் நீதிமன்ற தீர்ப்பு என சட்டத்தை கையில் எடுத்து கலகம் செய்து சட்டம் ஒழுங்கு பிரச்சனையை ஏற்படுத்த வாய்ப்பிருக்கும், என்பதாலும் மனிதாபிமானத்தோடு புதுமணத் தம்பதியர்களின் திருமண விழாவில் முதல்நாள் விளக்குகள் அணைக்கப்பட்டிருந்தால் அவர்களின் மன வேதனையை அடைந்து வாழ்நாள் முழுக்க அதன் வேதனையை அனுபவிக்க வேண்டும் என்பதையும் கருத்தில் கொண்டே தீர்ப்பு எழுதப்பட்டது.

இதன் காரணமாகவே டான்சி நில பேர வழக்கு இவரிடமிருந்தால் செல்வி. ஜெ. ஜெயலலிதா அம்மையாருக்கு சாதகமாக தீர்ப்பை கூறிவிடுவார் என எண்ணி அவரிடம் ஒப்படைக்கப்பட்ட வழக்கை சில வழக்கறிஞர்கள் கோரிக்கையை ஏற்று நீதியரசர் திரு. பாலசுப்ரமணியம் அவர்களுக்கு மாற்றப்பட்டது.

அதன்பிறகு அவரிடமிருந்து உச்சநீதிமன்றம் உத்தரவு போட்டு நீதிபதி. திரு. என். தினகரன் அவர்களுக்கு மாற்றப்பட்டது. மாண்புமிகு. திரு. நீதியரசர். என். தினகரன் அவர்களும் மூன்று நாட்களாக விசாரித்து தீர்ப்பை செல்வி. ஜெ. ஜெயலலிதாவிற்கு சாதகமாக வழங்கினார். அதை எதிர்த்து உச்ச நீதிமன்றத்தில் வழக்கை மேல் முறையீடு செய்தனர். உச்ச நீதிமன்றமும் உயர் நீதிமன்ற தீர்ப்பை உறுதி செய்தது. நீதிபதிகளை விமர்சனம் செய்யும் வழக்கறிஞர்களுக்கு இது பாடமாக இருந்தது. ஒரு நீதிபதி வழக்கை வாதத்தையும் சட்ட நுணுக்கங்களையும் தர்மத்தையும் வழக்குகளில் உள்ள நியாயம் அநியாயங்களை ஆராய்ந்த பிறகே தீர்ப்பு எழுதுகிறார்கள்.

வழக்கறிஞர்கள் அனைவரும் ஒரே மாதிரி இருப்பதில்லை தங்களிடம் வரும் வாடிக்கையாளர்களின் வழக்குகளை தங்கள் வாதத்திறமையால் வெற்றி கொள்பவர்கள் பலர் இருக்கத்தான் செய்கிறார்கள். சில வழக்கறிஞர்கள் பொய்யுரைத்து நீதிபதிக்கும் தரவேண்டும் என கூறி தங்களது வாடிக்கையாளர்கள் அதிகமாக பணம் வாங்குபவர்களும் உண்டு அதிர்ஷ்டவசமாக வெற்றி பெற்றால் நீதிபதி மேற்கொண்டும் கேட்கிறார் எனக்கூறி பணத்தை தந்திரமாக பெறுவதும் உண்டு. அதே வழக்கறிஞர் வழக்கில் தோல்வி கண்டால் பணத்தை திருப்பி தருபவர்களும் உண்டு தராதவர்களும் உண்டு சில வழக்கறிஞர்கள் ஒன்றுகூடி நீதியரசரை மாற்றக்கோரியும் ஆர்ப்பாட்டம் செய்வதுண்டு.

இது போலவே 2002-இல் நடைபாதை கடைகளை அகற்றவேண்டும் என்கிற உச்ச நீதிமன்றம் கொடுத்த தீர்ப்புக்கு எதிராக மீண்டும் வழக்கு வந்ததை ஆஜரான வழக்கறிஞர் நீதியரசர் ச. ஜெகதீசன் அந்த வழக்கை விசாரிக்கக்கூடாது

என்பதை ஏற்காமல் அடுத்த நாளுக்கு வழக்கை ஒத்தி வைத்த போது மறுநாள் காலை அந்த வழக்கறிஞர் ஒரு கூட்டத்தை கூட்டி நீதிமன்றத்தில் ஊர்வலம் நடத்தி அவரது ஜூனியர் வழக்கறிஞர் RDO ஆல் தாக்கப்பட்டதாக பொய் சொல்லி ஆர்ப்பாட்டம் செய்து தலைமை நீதிபதியிடம் கூக்குரல் இட்டு வழக்கை வேற நீதிபதிக்கு மாற்றம் செய்யப்பட்டது.

மீண்டும் வேறு ஒரு நீதிபதியிடம் மாற்றி அந்த நீதிபதியும் நான் தீர்ப்பில் என்ன கூற நினைத்தேனோ அந்த தீர்ப்பையே வழங்கினார் என்பதே நிறைவாக இருந்தது. பாதசாரிகளுக்கும், நடை பயிற்சி செய்பவர்களுக்கும் இந்த மாதிரி நடை பாதை ஆக்கிரமிப்பு கடைகள் நிச்சயம் தொந்தரவு அளிக்கும் என்பதே தீர்ப்பாக வழங்கப்பட்டது.

அவரது தாய் ஸ்ரீமதி உண்ணாமலை அம்மையாரின் கண்டிப்பான வளர்ப்பு உயர்ந்த பதவியான நீதிபதி பதவியை அடைந்த பிறகும் தலைகனமில்லாமல் நீதியின் தராசு யார் பக்கமும் சாயாமல் எந்த நிர்பந்தத்திற்கும் அடி பணியாமல் தனது தீர்ப்புகளை வழங்கியவர்.

அவரிடம் வந்த எத்தனையோ வழக்குகள் இருந்தாலும் சில வழக்குகளை மட்டுமே கூறப்பட்டுள்ளது. வீட்டு வாடகைதாரர் வீட்டை காலி செய்வது சம்மந்தமான வழக்கு, கடன் கொடுத்தவர் தான் வாங்கிய பணத்தை திருப்பி தராமல் ஏமாற்றுவது குறித்த வழக்கு என பல வழக்குகள் இவரது தீர்ப்புகள் பாராட்டை பெற்றது என்றே சொல்லலாம்.

திரு. ஐஸ்டிஸ் நடராஜன் அவர்கள் நமது பாசத்திற்குரிய நீதியரசரை பற்றி இவ்வாறு தெரிவிக்கிறார். பதவி ஏற்ற முதல் நாளிலிருந்து திரு. ஐஸ்டிஸ் நடராஜன் அவர்கள், திரு. ச. ஜெகதீசன் அவர்களின் செயல்பாடுகள் சிறப்பாகவும், தனித்தன்மை கொண்டதாகவும் இருந்தன. வழக்காளர்களின் கால விரையம், கட்டுக்கடங்காத செலவுகள், வீண் அலைச்சல்கள், போன்றவற்றை மனதில் கொண்டு வழக்குகளை விசாரிப்பதில் கண்டிப்புடனும் அதே நேரத்தில் கனிவுடனும் தன் பணியை செய்து காலம் கடத்தாமல் வழக்குகளை விசாரித்து சட்ட பூர்வமான தீர்ப்புகளை வழங்குவார்.

பொய் வழக்குகள், ஏமாற்று வேலைகள், திட்டமிட்டு காலங்கடத்துதல் சட்டங்களிலுள்ள ஓட்டைகளை பயன்படுத்தி அவற்றின் மூலம் விசாரணைக்கு முட்டுக்கட்டை போடுதல் அனுகூலமாக தீர்ப்பு கிடைக்க வாய்ப்பு இல்லை என்றால் வேறு கோர்ட்டுக்கு வழக்கை மாற்ற முயற்சி செய்வது போன்ற காரியங்கள் இவரிடம் பலிக்காது.

தாங்கள் வழக்கறிஞர்கள் என போலி வேடம் அணிந்து வரும் கும்பலையும் கண்டுபிடிக்கும் ஆற்றல் உள்ளவர் என தெரிவித்துள்ளார் என்பது நமக்கு பெருமையாக இருக்கிறது. இவை அனைத்தும் தெரிந்தும் சில வழக்கறிஞர்கள் தேவையற்ற விமர்சனங்களை வைப்பது சரியாக இருப்பதில்லை அடுத்து கலைஞருக்கு திரைப்படத்துறை விழா எடுப்பதை தடுக்கும் வகையில் மனு ஒன்று தாக்கல் செய்யப்பட்டது.

கலைஞருக்கு திரைத்துறையினர் பொன்விழாவை கொண்டாட இருந்ததை பொது தேர்தல் வர இருக்கிறது இந்த நேரத்தில் இத்தகைய விழா எடுப்பது திரு. கருணாநிதி அவர்களின் தனிப்பட்ட செல்வாக்கை உயர்த்தும் அது மறைமுக தேர்தல் பிரச்சாரமாகவும் அமையும் இது தேர்தல் விதிமுறைக்கு மாறானது எனக்கூறி தடை செய்தது அன்றைய (அ.இ.அ.தி.மு.க.) அரசு அதனை எதிர்த்து திரைத்துறையினர் நீதிமன்றத்தை அனுகினார்கள். அந்த வழக்கு நமது நீதியரசர் முன்பு விசாரணைக்கு வந்தது.

நீதியரசர் வழக்கின் தன்மையை ஆராய்ந்து தனது தீர்ப்பை இவ்வாறு கூறினார். இந்த குறிப்பிட்ட பாராட்டு விழா மிகுந்த தன்னார்வத்துடன் தமிழ் திரையுலகம் எடுக்கும் விழா, திரு. கருணாநிதியை தலைவராக கொண்ட தி.மு.க எடுக்கும் விழா அல்ல, அதனை தி.மு.க. கட்சி கேட்டுக்கொண்டதாலும் இவ்விழா எடுக்கப்படவில்லை இதுவே கருத்தாழமிக்க தன்னுடைய வசனங்களால் தமிழ் படங்களின் போக்கை பெருமளவிற்கு மாற்றிய ஒரு கதாசிரியர் வசனகர்த்தாவுக்கு எடுக்கப்படும் விழா, எனவே மாநில அரசு அனுமதி மறுத்ததை ரத்து செய்கிறேன் என்று தீர்ப்பு வழங்கி காவல் துறையினரின் பாதுகாப்போடு அந்த விழா இனிதாக நடைபெற்றது.

நீதியரசரின் கண்டிப்பு, கருணை, வழக்கை விசாரிக்கும் முறை என எல்லாவற்றிலும் பிரகாசித்தார் என்றே கூறலாம். அப்படி சிங்கிள் சிட்டிங் அமர்வில் அன்றைய நாளில் திராவிட முன்னேற்றக் கழக வழக்கறிஞர் திரு. சண்முக சுந்தரம் தாக்கப்பட்ட வழக்கு நீதியரசரிடம் விசாரணையை சி.பி.ஐ.க்கு மாற்ற வேண்டும் என்பதே வழக்கு.

தமிழகத்தில விசாரணை நடந்தால் சரியாக வராது என்பது வழக்கறிஞர்களின் கோரிக்கை இதன் காரணமாகவே அனைத்து வழக்கறிஞர்களும் கோர்ட்டை புறக்கணித்து வந்தார்கள்.

வழக்கை நான் விசாரிக்க வேண்டும் என்றால் வழக்கறிஞர்கள் மீண்டும் கோர்ட்டுக்கு வரவேண்டும் என கூறினார். வழக்கு விசாரணை நடந்த மூன்று நாட்களிலிலும் ( **FULL COURT** )-ஆக இருந்தது ஒட்டு மொத்த நீதிமன்றமும் மாண்புமிகு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் அவர்களின் தீர்ப்பை பொறுத்தே கோர்ட் இயங்கும் என்கிற நிலை வந்தது.

வழக்கின் தீர்ப்பை வழக்கறிஞர் திரு. சண்முக சுந்தரத்திற்கு சாதகமாக சி.பி.ஐ.க்கு மாற்றி அவரது மருத்துவ செலவு முழுவதும் அரசாங்கமே ஏற்க வேண்டும் என தீர்ப்பு கூறிய பின் வழக்கறிஞர்கள் போராட்டத்தை கைவிட்டு மீண்டும் கோர்ட்டுக்கு திரும்பினர்.

இதில் ஒரு செய்தி நீதியரசராக ரிட் மனு பிரிவில் அமர்ந்த அன்றே மிகப்பெரிய வழக்கை சர்வ சாதாரணமாக விசாரித்து தீர்ப்பை வழங்கி பாராட்டை பெற்றார் என்பது கூடுதல் சிறப்பு. பல வழக்குகளை கையாண்ட நமது நீதியரசர் முன் பச்சையப்பன் அறக்கட்டளையின் கீழ் செயல்பட்டு வந்த செங்கல்வராயன் அறக்கட்டளை வழக்கு விசாரணைக்கு வந்தது. அதனை விசாரித்த நீதியரசர் பச்சையப்பன் அறக்கட்டளையிலிருந்து செங்கல்வராயன் அறக்கட்டளையை பிரிக்க முடிவை செய்வதற்கு முன், பச்சையப்பன் கல்லூரி, பச்சையப்பன் பள்ளி, காஞ்சிபுரம், சிதம்பரம் போன்ற இடங்களில் கல்விகூடங்களை நடத்தும் பச்சையப்பன் அறக்கட்டளையின்கீழ் செங்கல்வராயன் அறக்கட்டளையும் செயல்பட்டு வந்தது.

அதனை பிரித்து தனி அறக்கட்டளையாக்க வேண்டும் என்கிற கோரிக்கை ஏற்கப்பட்டு இரண்டு மருத்துவர், இரண்டு இஞ்ஜினீயர்கள், இரண்டு வழக்கறிஞர்கள் என 15 நபர்கள் கொண்ட அறங்காவலர்கள் இருக்க வேண்டும் என்று தனி நீதியரசர் தீர்ப்பை வழங்கினார்.

அந்த தீர்ப்பை எதிர்த்து மேல் முறையீடு செய்தனர் அந்த வழக்கு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் மற்றும் நீதியரசர் திரு. பி.டி.தினகரன் முன்பு வந்தது. இருவரும் தனி நீதியரசர் தந்த தீர்ப்பை உறுதி செய்து செங்கல்வராயன் அறக்கட்டளைக்கு ஒரு நீதியரசர் தலைமை வகிக்க வேண்டும். அதன் பிறகு அறக்கட்டளையை தங்கள் நிர்வாகிகளை தேர்வு செய்யலாம் என தீர்ப்பை வழங்கினார்கள்.

இதனை எதிர்த்து பழைய அறங்காவலர்கள் உச்ச நீதிமன்றத்தை நாடி செங்கல்வராயன் அறக்கட்டளையில் முழுக்க முழுக்க வன்னியர் மட்டுமே இருக்க வேண்டும் என பழைய அப்பீல் தாக்கல் செய்தனர்.

உச்ச நீதிமன்றம் உயர்நீதிமன்ற தீர்ப்பை உறுதி செய்து நியமனங்களுக்கு உயர்நீதி மன்றத்தையே நாட தீர்ப்பு வழங்கியது. மீண்டும் வழக்கு நீதியரசர்கள் திரு. ச. ஜெகதீசன் மற்றும் திரு. தினகரன் முன்பு வழக்கு வந்தது. நீதியரசர்கள் இருவரும் செங்கல்வராயன் அறக்கட்டளையின் தலைவராக முன்னாள் நீதியரசர் தங்கமணி அவர்களை நியமித்தார்கள்.

பதவி ஏற்கும் நாளில் பழைய அறக்கட்டளை நிர்வாகிகள் பதவி ஏற்கவிடாமல் தகராறு செய்ததை மறுநாள் பத்திரிக்கை செய்தியை பார்த்து நீதியரசர் தானாக முன்வந்து சுவோமோட்டோ முறையில் வழக்கை தொடுத்து அத்துனை பேருக்கும் நோட்டீஸ் அனுப்பி ஆஜராக வைத்தார். டாக்டர். ராமதாஸ் அவர்களும் பலமுறை கோர்ட்டுக்கு வந்து நீதிமன்ற உத்தரவை மதிப்பதாக மன்னிப்பு கடிதம் தந்து நீதியரசர் திரு. தங்கமணி அவர்களை தலைவராக ஏற்றுக்கொள்வதாக கூறி செங்கல்வராயன் அறக்கட்டளை செயல்பட தொடங்கியது.

இப்படி பல வழக்குகளை தனக்கே உரிய ஆற்றலுடன் குடும்ப வழக்குகள் கணவன் மனைவி தகராறு, கடன் வாங்கி ஏமாற்ற நினைப்பவர்களின் வழக்குகள் என பலவற்றை திறம்பட விசாரித்ததோடு இல்லாமல் துப்பறிந்து பல வழக்குகளின் தீர்ப்புகளை வழங்கியுள்ளார்.

நீதியரசரின் அணுகு முறையில் துல்லியமாக படம்பிடித்து காட்டும் ஒரு வழக்கு ஒரு கொலை குற்றவாளிக்கு கீழ்மை நீதிமன்றம் ஆயுள் தண்டனை வழங்கியது அதனை எதிர்த்து உயர் நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்யப்பட்டு வழக்கு நீதியரசர் முன்பு விசாரணைக்கு வந்தது.

வழக்கறிஞர்கள் தங்கள் வாதங்களை தொடராமல் வாய்தாவுக்கு மேல் வாய்தா வாங்கிக்கொண்டிருந்தார்கள். இருதரப்பு வழக்கறிஞர்களிடம் ஏன் இப்படி செய்கிறீர்கள் என நீதியரசர் கேட்டதற்கு சம்மந்தப்பட்ட வழக்குகளின் விவரங்கள் ரிக்கார்டுகள் கீழ்கோர்ட்டில் காணவில்லை என்றும் ஏற்கனவே இம்மாதிரியான வழக்கில் குற்றவாளிக்கு சாதகமாக தீர்ப்பை வழங்கி விடுதலை செய்துள்ளதாக

தெரிவித்ததை ஏற்க மறுத்து இது மாதிரி தீர்ப்பை வழங்கினால் நாளை பல வழக்குகளின் நிலைமை இவ்வாறே சம்மந்தப்பட்ட வழக்குகளின் ஆவணங்கள் தொலைந்து விடுதலையை கேட்கும் வாய்ப்பு உருவாகும் என்பதை கூறி கீழமை நீதிமன்றம் அளித்த தீர்ப்பை உறுதி செய்து தனது தீர்ப்பை வழங்கி முன் உதாரணமாக திகழ்ந்தார் நமது நீதியரசர்.

நீதியரசரின் வாழ்க்கை வரலாற்றை தெரிந்து கொள்வதால் மற்றற்ற மகிழ்வை தருகிறது. ஒருவர் வாழும் காலத்தில் தனது இருப்பை சமூகத்திற்கும் நாட்டிற்கும் வைப்பது அரிது மட்டுமல்ல அதற்கு இறைவனின் கருணையும் வேண்டும். அன்றைய காலகட்டத்தில் வழக்கறிஞர். திரு. ஏ.கே. சண்முகசுந்தரம் தாக்கப்பட்ட வழக்கை நமது நீதியரசர் கையாண்டார்.

அப்போது அ.இ.அ.தி.மு.க. ஆட்சி நடைபெற்றுக்கொண்டிருந்தது. அக்கட்சியை சார்ந்த சிலர் சம்மந்தப்பட்டிருக்கிறார்கள் என்கிற அடிப்படையில் வழக்கு இங்கே நடந்தால் உள்ளூர் போலீஸ் ஆளும் கட்சிக்கு ஆதரவாக செயல்படுவார்கள் எனவே முதல் தகவல் அறிக்கையை சி.பி.ஐ.க்கு மாற்ற வேண்டும் என மனு தாக்கல் ஆனது.

இது தொடர்பாக வழக்கறிஞர்கள் நீதிமன்ற புறக்கணிப்பு போராட்டத்தில் ஈடுபட்டனர். அந்த நேரத்தில் தலைமை நீதிபதி. திரு. ஏ.கே. சுவாமி அவர்கள் நமது நீதியரசரிடம் நீதிபதிகள் தங்கள் பணிகளை தொடர முடியாமல் நீதிமன்றமே ஸ்தம்பித்து இருக்கிறது என்றும் விரைவாக விசாரணையை முடித்த தீர்ப்பினை வழங்க கேட்டுக்கொண்டார். ஏதோ தலைமை நீதிபதி உத்தரவு இடுகிறார் என நினைத்து அதனை கட்டளையாக ஏற்று நடக்க வேண்டும் என்பதில்லை என்று கூறிய விதம் தலைமை நீதிபதியின் எண்ணம் மற்ற நீதியரசர்களின் சுதந்திரத்தை மதிக்கும் வண்ணம் தலைமை நீதிபதியின் பேச்சு இருந்தது.

நமது நீதியரசருக்கு அவர் மீது அன்பை பெருக்கிய. வேறொரு வழக்கை உங்களுக்காக பட்டியலிடுகிறேன். என்று கூறிய தலைமை நீதிபதி வழக்கறிஞர் திரு. கருப்பன் இதில் ஆஜராகிறார் என்றார். வழக்கறிஞர் திரு. கருப்பன் கொடுத்த குடைச்சலால் ஏழு நீதிபதிகள் இந்த வழக்கை விசாரிப்பதிலிருந்து விடுவித்துக்கொண்டனர்.

இந்த வழக்கை நீங்கள்தான் விசாரித்து தீர்ப்பு கூறமுடியும் என்று தலைமை நீதிபதி கூறினார். அந்த வழக்கை தனக்கே உரிய சாதூரியத்தடன் விசாரித்து தீர்ப்பை வழங்கினார். அதேபோல தலைமை நீதியரசராக வந்தமர்ந்த திரு. லிபரான் அவர்கள் பதவி ஏற்று பத்து நாட்களில் மதிய இடைவேளையில் தங்கள் அறைக்கு வருகிறேன் என்றார்.

ஒரு தலைமை நீதிபதி வந்து பத்து நாட்களில் நமது நீதியரசரின் நேர்மையை, வழக்கை கையாளும் திறமையை அறிந்து தனது அன்பை காட்டினார் அன்று நமது நீதியரசர் தலைமை நீதிபதியிடம் தாங்கள் என் அறைக்கு வரவேண்டாம் மரியாதை நிமித்தமாக நானே வருகிறேன் என்று தலைமை நீதியரசர் அறைக்கு சென்றவரிடம் தலைமை நீதிபதி ஒரு கடிதத்தை காட்டினார்.

அதில் **THERE WILL BE AN RDX BOMB IN THE CHAMBER COURT AND HOUSE OF JAGADEESAN** என எழுதியிருந்தது. எனவே தங்களுக்கு உடனடியாக உரிய பாதுகாப்பை வழங்குகிறேன் என்றார். அன்னை இந்திரா அம்மையாருக்கே தன் பாதுகாவலர்களே பாதுகாப்பு இல்லாமல் சுட்டு வீழ்த்தப்பட்டார் என்கிறபோது அவருக்கு இல்லாத பாதுகாப்பா எனக்கு தரமுடியும் என சிரித்த முகத்தோடு கூறிவிட்டு வந்தார். ஒன்று நடக்க வேண்டும் என்றால் அது நடந்தே தீரும் என்பதில் உறுதியாக இருந்தார் நமது நீதியரசர் மாண்புமிகு திரு. ச. ஜெகதீசன் அவர்கள்.

அதிர்ஷ்டத்தையும் இறைவனின் கருணையும் ஒருங்கே பெற்ற மாண்புமிகு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் அவர்கள் நீதி பரிபாலனம் செய்ததோடு நிற்காமல் பல நல்ல காரியங்களையும் செய்ய இறைவன் இட்ட கட்டளை. அவர் 1995-இல் உச்சநீதி மன்ற நீதியரசர் திரு. எஸ். நடராஜன் அவர்கள் நமது நீதியரசரை எத்திராஜ் மகளிர் கல்லூரிக்கும், பள்ளிக்கும் நிர்வாக குழுவில் இருக்க வேண்டும் என விரும்பி அவரை இணைத்தார்.

இது நீதியரசர் பெயரை கவனித்தால் இவரோடு சாட்சாத் அந்த நடராஜபெருமானே நீதியரசர் ரூபத்தில் பொது பணியும் செய்ய அருள் பாலித்தார் என்றே படுகிறது. இரண்டு வருடங்கள் கழித்து நமது நீதியரசர் 1997-இல் நிர்வாக குழுவின் தலைவரானார். எத்திராஜ் காலேஜ் மிகப்பெரிய வளாகத்தையும் கட்டிடத்தையும் கொண்டது.



அந்த காலத்தில் நதியாக ஓடிய கூவ நதிக்கரையை ஒட்டி கட்டப்பட்டது எத்திராஜ் காலேஜ் ஆகும். இவர் நிர்வாக குழு தலைவரான பிறகு கல்லூரியின் தோற்றத்தை அடியோடு மாற்றினார். கல்லூரியின் உள்ளே சாலைகளை அமைத்தும் தோட்டங்களை உருவாக்கியுள்ள புதிதாக இரண்டரை லட்சம் சதுர அடியில் விடுதி, நூலகம், தேர்வு கட்டுப்பாட்டு அலுவலகம், எம்.பி.ஏ. பிளாக், என்கிற தனி கட்டிடம் என விரிவுபடுத்தப்பட்டது. 20 ஆண்டுகளாக மரத்தில் ஆன வாயிற் கதவை மாற்றி நுழைவு வாயில் அழகு படுத்தியதில் இவரது செயல் பெரும் வரவேற்பை பெற்றது.

பழைய கட்டிடங்கள் அனைத்தும் புதிய பொலிவு பெற்றது. இவரது பத்தாண்டு தலைமை காலத்தில் எத்திராஜ் கல்லூரியில் இளநிலைப்படிப்பில் ஒன்பது புதிய பாட பிரிவுகளும் முதுநிலை பாடப்பிரிவில் புதிதாக ஏழும் கொண்டு வந்தார். கல்லூரிக்கு அன்றைய ஜனாதிபதி மாண்புமிகு. அப்துல்கலாம் அவர்கள் எத்திராஜ் கல்லூரியின் விழாவுக்கு வந்தபோது கல்லூரி அன்றைய நிர்வாகத்தினரால் நமது நீதியரசரை அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்.

இவர் நிர்வாக குழுவின் தலைமை பொறுப்பில் இருந்தபோது கல்லூரியின் முதல்வர்களாக இருந்த ஸ்ரீமதி இந்திராணி மற்றும் தவமணி ஆகியோர் நல்ல ஒத்துழைப்பை வழங்கினார்கள். அதன் பொருட்டு கல்லூரியின் கல்வி தரமும் உயர்ந்தது. இவருக்கு பின் திரு. ஏ.எம். சுவாமிநாதன் ரிட்டயர்ட் ஐ.ஏ.எஸ். அவர்கள் தலைவராக தேர்வானார். தலைவராக பொறுப்பேற்ற



எத்திராஜ் கல்லூரி விழா ஒன்றில் **டாக்டர். அப்துல் கலாம்** அவர்கள்

திரு. எம்.ஏ. சுவாமிநாதன் அவர்கள் தலைமையில் திரு. எம்.பி.ஏ. பிளாக் திறப்பு விழாவில் அப்துல்கலாம் அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டது சிறப்பாகும்.

அந்த விழாவில் நமது நீதியரசருக்கு நிர்வாக குழு இவரது சிறந்த பணிக்காக மிகப்பெரிய பாராட்டை வழங்கியது. நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் அவர்களின் 10 ஆண்டு காலத்தில் எத்திராஜ் காலேஜ் பொலிவு மட்டும் இல்லாமல் சென்னையில் மிக சிறந்த கல்லூாரி என பெயர் எடுத்தது.

எத்திராஜ் கல்லூரி மற்றும் பள்ளியின் பத்தாண்டு கால நிர்வாக குழு தலைவர் பொறுப்பை ஏற்று அந்த கல்லூரியின் மதிப்பை பல நூறு மடங்கு உயர்த்தினார் என்பதே அவரது கடுமையான நேர்மையான காரியத்தின் பெருமையாக கூறுகின்ற பதிவாக உள்ளது.

அடுத்ததாக வந்த தலைமை நீதிபதி திரு. ஏ.சி. அகர்வால் சில மாதங்களே பதவியிலிருந்தாலும் நமது நீதியரசரின் குடும்பத்தோடு நெருக்கமாக பழக ஆரம்பித்து குடும்ப நண்பராக மாறினார். தலைமை நீதியரசர் திரு. ஏ.சி. அகர்வால் அவர்களின் பிரிவு உபசார விழாவில் நமது நீதியரசரை கேப்டன் என புகழ்ந்து பேசியது பெருமைக்குரியதாகும். 2018 –இல் இவர் இறைவனடி சேர்ந்தார்.

திரு. அகர்வால் நல்ல அன்புடன் இருந்தது பெருமையாகும். அடுத்ததாக வந்த தலைமை நீதியரசர். திரு. கே.ஜி. பாலகிருஷ்ணன், திரு. என்.கே. ஜெயின், ஆந்திர மாநிலத்திலிருந்து வந்த திரு. சுபாஷன் ரெட்டி மற்றும் நீதிபதிகள் திரு. டி. தினகரன், திரு. முருகேசன், திரு. ரவிராஜ் பாண்டியன், திரு. கோவிந்தராஜ் மிகுந்த நல்ல உறவுகளுடனும் அன்புடனும் பழகினார்கள். நீதியரசர் திரு. சுபாஷன் ரெட்டி அவர்கள் 2019-இல் இறைவனடி சேர்ந்தார்.

இவர்களது நட்பும் இன்றளவும் தொடர்கிறது என்பது நீதியரசரின் நற்குணத்திற்கான சான்றாகும். கர்நாடகா, நாக்பூர், கேரளா உயர்நீதி மன்றங்களிலிருந்து மாற்றலாகி வந்த நீதிபதிகளின் குறிப்பாக மாண்புமிகு திரு. ரு. ஜெயசிம்ஹபாபு, திரு. ஜெய்ராம் சௌட்டா, திரு. சிவராஜ் பாட்டில், திரு. சிர்புர்கர், குரூப் ஆகியோர் நமது நீதியரசர் மாண்புமிகு. திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கு நெருங்கிய நண்பர்களாகினர்.

சமீபத்தில் உச்ச நீதிமன்ற நீதிபதியாக ஓய்வு பெற்ற நீதிபதி. திரு. சிர்புக்கர் தமிழ்நாடு எனக்கு இரண்டாவது வீடு என்றும் நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் இல்லை என்றால் மற்ற நீதிபதிகளிடம் பழகும் வாய்ப்பு கிடைத்திருக்காது என்று கூறியது நமது நீதியரசருக்கு பெருமை சேர்க்கக்கூடியதாகும்.

நீதிபதி ஜெயராம் சௌட்டா அவர்களும் நமது நீதியரசரும் நெருங்கிய நண்பர்களாக இருக்கின்றனர். இப்பொழுதும் வாரம் ஒருமுறை இருவரும் போனில் பேசாமல் இருந்ததில்லை என்கிற அளவிலே நட்பும் தொடர்கிறது. அதுபோலவே மற்ற நீதியரசர்களும் நீதியரசரின் பழகும் தன்மையை கண்டு வியந்து நட்புடன் இருப்பது பெருமைக்குரிய செய்தியாகும் நீதியரசர் திரு. கற்பக விநாயகர் அவர்களோடும் நெருங்கி பழகினார்.

இப்படி இவர் சென்னை உயர் நீதிமன்ற நீதியரசராக இருந்தபோது எண்ணற்ற நீதியரசர்களாக இந்தியா முழுவதும் பணியாற்றிய பல மாநில நீதிமன்ற நீதிபதிகள், தலைமை நீதிபதிகள், உச்ச நீதிமன்ற நீதிபதிகள், தலைமை நீதியரசர்கள் உள்பட இவரது நேர்மையும் வழக்கை கையாளும் திறமையும் அறிந்து இவருடன் நட்புடன் இருந்தது வரலாறாக இருப்பது பெருமைக்குரிய விஷயமாகும்.

இன்றைய நாளில் மணிப்பூர் உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதியாக உயர்வு பெற்று இருக்கும் திரு. ஆர். சுதாகர் அவர்களும், இன்றைய சென்னை உயர் நீதிமன்றத்தில் நீதிபதியாக இருக்கும் திரு. ரவிசந்திர பாபு செங்குந்தர் நீதிபதி திரு. பிரகாஷ் போன்றவர்கள் நல்ல நட்புடன் இருக்கிறார்கள்.

இப்படி இந்திய நீதிபரிபாலனம் செய்கின்ற துறையில் இந்தியா முழுவதும் இன்றைய தேதியிலும் நமது மதிப்பிற்கும், அன்பிற்கும் உரியவரான மாண்புமிகு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் அவர்களுக்கென்று ஒரு தனி மரியாதை உள்ளதை தெளிவாக அறிய முடிவதில் மகிழ்ச்சி.

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து முந்தி இருப்பச்செயல் தந்தை தன் மக்களுக்குச் செய்ய வேண்டிய நல்லுதவி அவர்களை அறிஞர்கள் அவையில் புகழுடன் விளங்குமாறு ஆக்குதலே ஆகும்.

மகன் தந்தைக்காற்றும் உதவி இவன் தந்தை எந்நோற்றான்கொல் எனும் சொல் மகன் தந்தைக்கு செய்யும் கைமாறு இவன் தந்தை இவனை மகனாக பெற என்ன தவம் செய்தார் என ஊரார் புகழ்ந்து பேசவேண்டும்.

இதில் ஒரு ஆண் பிறக்கும் போது அவரது இல்ல சூழல், தாயின் அரவணைப்பு, தந்தையின் கண்டிப்பான, ஒழுக்கமான வளர்ப்பு என்பது ஒருகல்லை செதுக்கி அழகிய சிலையாக ஆக்குவது அதுவும் பலர் வழிபடும் சிலையாக வடித்தது போல சேலத்து சிங்கம் சட்ட வல்லுனராக திகழ்ந்த திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களும் இவரது தாயாரும் தங்களுக்கு மூன்றாவதாக பிறந்த நமது நீதியரசரை செதுக்கி சமுதாயத்திற்கு ஒரு நல்ல பண்புகள் மனிதரை கொடுத்தார்கள் என்பது சிறப்பாகும்.



நமது நீதியரசரும் தனது தந்தை வழியிலேயே சென்னை பார் அசோசியேஷன் செகரேட்டரி பதவி அடைந்து பார் அசோசியேஷன் 125-ஆம் ஆண்டு விழாவினை சிறப்பாக கொண்டாடி பெருமை சேர்த்தவர். உண்மையில் இவரது வாழ்க்கை வரலாறு நமது செங்குந்தர்கள் அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு வழக்கறிஞராக தனது தந்தையைபோல தொழிலை ஆரம்பித்து தந்தைக்கு பெருமை சேர்க்கும் விதமாக சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாகவும் பதவி பெற்று வள்ளுவரின் வரிகளுக்கேற்ப தனது தந்தைக்கு பெருமைசேர்த்தார்.

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக பதவி ஏற்று எத்தனையோ சிக்கலான வழக்குகளை தனக்கே உரிய சாதுர்யத்தால் முடித்து வைத்தார். இவரது தீர்ப்பே சரி என உச்ச நீதி மன்றமும் பல வழக்குகளில் தனது தீர்ப்பை ஆணித்தரமாக கூறியது இவரது தீர்ப்பு அத்தனை சரியானதாக இருக்குமாறு யாருக்கும் இசைந்து கொடுக்காமல், தர்மத்தின் வழியில் நின்று தீர்ப்பு வழங்கினார். இவரது மதிப்பு இந்திய நீதித்துறையில் இவருக்கென இன்றளவும் சிறந்த பெயர் உள்ளது.



இவரது தந்தை பெற்ற ஃபிரிமேஸைரியில் உயர்ந்த ரேங்க் இவரும் பெற்றது சிறப்பு. இவரது தந்தை சட்ட நுணுக்கத்தில் எவ்வாறு சிறந்து விளங்கினாரோ அதைப்போலவே நமது நீதியரசரும் இருந்தார். சென்னை உயர்நீதிமன்ற வளாகத்தில் இவரது தந்தை ஒரு வழக்கறிஞர் என்கிற போதும் திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களின் நூற்றாண்டு விழாவில் பல நீதியரசர்கள் கலந்து கொண்டு புகழாரம் கொடுத்தது அவரது சிறந்த சேவைக்கு கிடைத்த அங்கீகாரம் ஆகும்.

இதுநாள் வரை நமது மிக பாசத்துக்குரிய நீதியரசரின் வாழ்க்கை வரலாற்றை மிக சந்தோஷமாக எழுதி வந்த நான் பணி ஓய்வு என்கிற தலைப்பை எவ்வாறு எழுதுவது என தவித்தேன். நீதியரசர் 1941 மார்ச் மாதம் 23-ந் தேதி பிறந்தார். அவரது பணி ஓய்வும் 2003 மார்ச் மாதம் என்பதும் ஓர் ஒற்றுமை தனது சட்ட படிப்பை முடித்து 1964-ல் தன்னை வழக்கறிஞராக பதிவு செய்து

முதன் முதலில் சீனியர் வழக்கறிஞர். திரு. வி. ராமசாமி அவர்களிடம் ஜூனியராகி பின்பு திரு. பராசரனிடமும் பயிற்சி பெற்று தனது தந்தையிடமும் சிறந்த பயிற்சி பெற்றதன் விளைவாக டிராப்டிங்கில் சிறந்து விளங்கினார்.

இவரது தந்தை திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் வழக்கறிஞராக மட்டுமில்லாமல் சமூக ஆர்வலராகவும் இருந்தார் அதோடு சேலம் மாவட்டத்தில் கூட்டுறவு இயக்கத்தை முன்னின்று பரப்பியவர் சிறந்த வழக்கறிஞராக அன்றைய காலகட்டத்தில் 15-க்கும் மேற்பட்ட ஜூனியர்கள் கொண்டவருமாகவும், தன்னிடமிருந்த வழக்கறிஞர்கள் பலர் உயர்நீதிமன்ற நீதிபதிகளாக பதவியடைந்ததற்கும் பெருமை கொண்டவர்.

தந்தை வழியை தவறாமல் தானும் சிறந்த வழக்கறிஞராக 30 வருடம் பிராக்டீஸ் செய்து தனது பெரும்பாலான வழக்குகளில் வெற்றிகளை குவித்தார் நமது நீதியரசர் என்றால் சிறப்பேயாகும்.

தனது தந்தையை போலவே இவரிடமிருந்து ஜூனியர்கள் பலர் உயர்நீதிமன்ற நீதிபதிகளானது இவருக்கு பெருமைகுறிப்பாக நீதியரசர் திரு. ரவிராஜ் பாண்டியன் அவர்கள் இன்றும் உயர்நீதிமன்ற நீதியரசராக இருக்கும் நீதியரசர் திரு. ரமேஷ் அவர்கள் போன்றவர்களை குறிப்பிட்டு சொல்லலாம். 17-03-2003 அன்று மெட்ராஸ் பார் அசோசியேஷன் பிரிவு உபசார விழாவினை ஏற்பாடு செய்து சிறப்பித்தது.





18-03-2003 -இல் உயர் நீதிமன்றத்தில் நமது நீதியரசருக்கு அன்றைய தலைமை நீதிபதி திரு. சுபாஷன் ரெட்டி அவர்களின் தலைமையில் பிரிவு உபசார விழா நடந்தது.

அன்றைய கால கட்டத்தில் நமது நீதியரசரையும் சேர்த்து சென்னை உயர் நீதிமன்றத்தில் 23 நீதிபதிகள் பதவியிலிருந்தனர். அன்றைய பிரிவு உபசார விழாவில் 21 நீதிபதிகள் கலந்து கொண்டனர். விழா அரங்கம் வழக்கறிஞர்களால் நிரம்பி வழிந்தது. தமிழ்நாடு அட்வகேட் ஜெனரல் திரு. என்.ஆர். சந்திரன் அவர்கள் பிரிவு உபசார உரையை நிகழ்த்தினார்.

அவர் கூறுகையில் இந்த நீதிமன்றத்தில் 17-10-1994 இல் நீதியரசராக பதவியேற்றீர்கள். காற்றுமின்றி சிறகுகளுமின்றி காலம் பறந்துவிட்டது. தாங்கள் பேசியது குறைவு ஆனால் அந்த பேச்சு வெளிப்படையானதாக இருந்தது. குழப்பமான கருத்துக்களை எப்போதும் வெளிப்படுத்தியதில்லை.

1981 -இல் தாங்கள் அரசு வழக்கறிஞராக நியமிக்கப்பட்டீர்கள் அந்த பதவிக்குரிய மரியாதை தரப்படவில்லை என்பதால் அன்றைய மந்திரி திரு. பொன்னையன் எவ்வளவோ கேட்டும் இராஜினாமா செய்தீர்கள். நீதிபதியாக வருவதற்கு மிகுந்த தயக்கம் காட்டினார்கள். ஆனால் ஏற்றுக்கொண்ட பிறகும் தங்கள் உயர்பதவி அடைந்த போதும் தங்கள் இயல்பு மாறவில்லை தங்கள் பணியில் உறுதியும் கண்டிப்பையும், பொருந்தாதவற்றை ஏற்றுக்கொள்ளாத பிடிவாதமும் காட்டினீர்கள். உங்களது முடிவுகளையும் முடிவு எடுக்கும் முறைகளும் எந்த விமர்சனமும் பாதித்ததில்லை. விமர்சனங்களை எதிர்கொள்ளும் பலம் உங்களுக்கு இருந்தது.

தாங்கள் ஜெ. சுதர்சன் வழக்கை கையாண்ட விதத்திலிருந்துதான் வக்காலத்தில் கையெழுத்து இடும் வழக்கறிஞரும் அதனை அட்டஸ்டட் செய்யும் வழக்கறிஞரும் பார்கவுன்சில் நம்பரை போடும் வழக்கம் வந்தது.

அதேபோல நடைபாதை ஆக்கிரமிப்பில் நீங்கள் உறுதியாய் இருந்து தீர்ப்பு வழங்கியதால் இன்று முறையற்ற நடைபாதை ஆக்கிரமிப்பு அறவே இல்லை தங்களது மேற்கண்ட சிறப்பான பணியை பாராட்டியாக வேண்டும் சிவில் சட்டம் பற்றிய தங்களின் பேரறிவு பலவிதமான சட்டப் பிரச்சனைகளை எளிதாக தீர்க்க முடிந்தது.

17-03-2003 அன்று நடைபெற்ற மெட்ராஸ் பார் அசோசியேஷன் நடத்திய பிரிவு உபசாரவிழா 18-03-2003 அன்று உயர் நீதிமன்றம் பிரிவு உபசார விழா எடுத்தது 25-03-2003 பிரிவு உபசார பெருவிழா அட்வகேட் அசோசியேஷன் என பணி ஓய்வு பெறும் ஒரு நீதியரசருக்கு மூன்று முறை விழா எடுத்து பெருமை சேர்த்தது.

மீண்டும் 25-03-2003 மெட்ராஸ் ஐ கோர்ட் அட்வகேட் அசோசியேஷன் இதை ( மெகா அசோசியேஷன் ) என்பார்கள் தென்கிழக்கு ஆசியாவிலேயே பெரிய அளவிலான சுமார் 5000-க்கும் மேற்பட்ட உறுப்பினர்களை கொண்ட வழக்கறிஞர்கள் சங்கம் உயர் நீதிமன்றத்தில் லாயர்ஸ் சேம்பர் ( பேஸ் 111 ) ஐந்தாவது மாடியில் நமது நீதியரசருக்கு பிரிவு உபசார விழாவை ஏற்பாடு செய்தது.

சென்னை உயர் நீதிமன்ற வரலாற்றில் ஒரு வரலாறாகவே இன்றும் என்றும் இருக்கும் என்பது நமது நீதியரசருக்கு கிடைத்த பெருமையாக கொள்வோம். பிரிவு உபசார விழாவில் சீனியர் வழக்கறிஞர்களாக இருந்த திருவாளர்கள். பி. எச். பாண்டியன், காந்தி, ஆர். கிருஷ்ணமூர்த்தி, கே.எஸ். நடராஜன், மோகன், பராசரன், ஆர். சண்முக சுந்தரம், ஜி. மாசிலாமணி, டி. ஆர். மணி, போன்றவர்கள் வாழ்த்தியது பெருமைக்குரிய வாழ்த்துகளாகும்.

இதில் ஒரு செய்தி என்னவென்றால் சில வருடங்களாக அட்வகேட் அசோசியேஷன் ஓய்வு பெரும் நீதியரசர்களுக்கு பிரிவு உபசார விழா எடுக்காமல் இருந்தனர். 2003 -இல் அட்வகேட் அசோசியேஷன் நமது நீதியரசருக்கு விழா எடுத்தனர். அதன்பிறகு இப்படி ஒரு விழா இன்று வரை யாருக்கும் பிரம்மாண்டமாக எடுக்கவில்லை என்பது தெரிகிறது.

அந்த வகையில் இவர் மிகவும் பெருமைக்குரியவராக திகழ்கிறார் என்றால் அது மிகையாகாது 18-03-2003 -இல் பிரிவு உபசார விழாவில் தமிழ்நாடு அட்வகேட் ஜெனரல் திரு. என். ஆர். சந்திரன் அவர்கள் மேலும் கூறுகையில்

இன்று தாங்கள் ஓய்வு பெறுவதாக நினைத்திருப்பவர்களுக்கு இச்சபையறிய ஒரு இனிய செய்தியை கூறுகிறேன். உச்ச நீதிமன்ற நீதியரசர் மாண்புமிகு திரு. கிருபால் அவர்களின் பரிந்துரையை ஏற்று மாண்புமிகு இந்திய ஜனாதிபதி அவர்கள் தனது விருப்பத்துடனும் முழு சம்மதத்துடனும் நமது நீதியரசரை நியமித்து, மாண்புமிகு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் அவர்கள் நாளை புதிதாக பொறுப்பேற்க இருக்கும் இன்டலக்சுவல் பிராப்பர்ட்டி அப்பலேட் போர்டு தலைவர் பதவிக்கு எனது மனமார்ந்த வாழ்த்துக்களை தெரிவிக்கிறேன் என்றார்.

மத்திய அரசாங்கத்தின் பணி நியமன ஆணையை சென்னை உயர் நீதிமன்ற தலைமை நீதியரசர் வாழ்த்துக்களோடு நமது அன்புக்குரிய நீதியரசரிடம் கொடுத்தார். இந்த தலைவர் பதவி என்பது இந்திய அரசாங்கத்தின் புதிதாக ஏற்படுத்திய அமைப்பின் முதல் தலைவராக பொறுப்பேற்கும் பதவி எல்லா வகையிலும் திறமைசாலியாக இருந்தவரை தேடி வந்த பதவி என்பதே தனி சிறப்பு.



விழாவில் நமது நீதியரசர் ஏற்புரை வழங்கிய போது அவர் கூறியது யாதெனில். அட்வகேட் ஜெனரல் வெளியிட்ட தாராளமான புகழுரை வார்த்தைகளுக்கு நன்றி, இங்கு இந்த சீர்மிகு பிரிவு உபசார விழாவில் கலந்து கொண்ட அத்துனை பேருக்கும் நன்றி.

அட்வகேட் ஜெனரல் அவர்களுடன் எனக்கு முப்பது ஆண்டுகளாக பழக்கம் உள்ளது என்றார். வழக்கறிஞர்களிடம் நான் எதிர்பார்த்ததெல்லாம் தவறான பிரதிநிதித்துவம் கூடாது என்பதுதான். என் தந்தை எனக்கு உபதேசித்த ஒன்று நாளை என்ற ஒன்று வரப் போவதில்லை என்ற நினைப்போடு பணியாற்று என்பதாகும். அதோடு நீதிபதிகளுக்கு மரியாதை தர வேண்டும் என்கிற

கலாசாரத்தை ஜுனியர்களிடம் என்னால் வளர்க்க முடிந்தது. நான் என்றும் நீதிமன்றத்தின் கண்ணியத்தை காத்தவன் என்பதால் கண்டிப்பாக இருந்ததற்கு வருத்தப்படவில்லை. 25-04-2001 தேதியை என்னால் மறக்கவே முடியாது. அன்று கோர்ட் வராண்டாவில் ஒரு கும்பல் உண்மைக்கு புறம்பான கோஷங்களை போலியாக போட்டுக்கொண்டிருந்ததை மற்ற வழக்கறிஞர்களும் வேடிக்கை பார்த்தனர். ஒரு வழக்கறிஞர் தாக்கப்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டதாக கூறி அந்த கோஷமும் புறக்கணிப்பு நாடகமும் அரங்கேறி கடைசியில் அது மிகவும் அசிங்கமான ஒன்றாக மாறிப்போனது.



2003-இல் (I.P.A.B) என சுருக்கமாக குறிப்பிடப்படும் இன்டலக்சுவல் பிராப்பர்ட்டி அப்பலேட் போர்டு அதாவது அறிவுசார் சொத்துரிமை மேல் முறையீட்டு தீர்ப்பாயம் என்கிற அமைப்புக்கு தலைவராக நியமிக்கப்பட்டார் அந்த அமைப்பு டிரேட் மார்க் சட்ட பிரிவு எண். 82 அமுலுக்கு வந்தது. இதில் ஒரு தலைவர், ஒரு துணைத் தலைவரும் ஒரு டெக்னிக்கல் மெம்பர் என மூவர் முறைப்படி பொறுப்பேற்றனர்.

டிரேட் மார்க், பேட்டன்ட் போன்றவை தொடர்பாக எழுகின்ற மேல்முறையீட்டு மனுக்களை விசாரித்து தீர்ப்பு வழங்குவதுதான் (I.P.A.B) யின் முக்கிய செயலாகும். இது இந்தியா முழுவதற்குமான அமர்வு 2003 ஆம் ஆண்டே சென்னை, கொல்கத்தா, டெல்லி ஆகிய நகரங்களில் அமர்வுகளை நடத்தியது.

இந்த (I.P.A.B) பதவி என்பது இந்திய அரசால் புதிதாக தொடங்கப்பட்ட அமைப்பாகும். அந்த அமைப்பிற்கு மாண்புமிகு இந்திய ஜனாதிபதி அவர்களின் நேரடி பதவி வழங்கல் முறையில் நமது நீதியரசரின் திறமைக்கு கிடைத்த அதுவும் புதிதாக உருவாக்கப்பட்ட ஒரு துறையின் முதல் தலைவர் என்கிற பெருமை.

2004 ஜனவரியிலிருந்து 2006 மார்ச் வரை இந்தியா முழுவதுமுள்ள மாநிலங்களில் சுமார் 830 வழக்குகளை இவரது தலைமையில் இருந்த தீர்ப்பாயம் தீர்த்து வைத்தது குறிப்பிடத்தக்கது. அதேபோல பல மாநிலங்களின் உயர்நீதிமன்றங்களில் பல ஆண்டுகளாக தேங்கியிருந்த அறிவுசார் சொத்துரிமை தொடர்பான வழக்குகள் இவரது தீர்ப்பாயத்திற்கு மாற்றப்பட்டு அவை சுமூகமாக விரைந்து தீர்த்து வைக்கப்பட்டது இவரது திறமைக்கு சான்று.

(I.P.A.B)-க்கென நிரந்தர அலுவலகம் தரப்படாததால் டிரேட் மார்க் அலுவலகங்களிலேயே வழக்குகளை நடத்த வேண்டியிருந்ததால் நமது நீதியரசர் அன்றைய மத்திய அமைச்சர் மாண்புமிகு அருண்ஜெட்லி அவர்களை சந்தித்து கேட்டுக்கொண்டதற்கு இணங்க அவரும் ஒரு உத்தரவை போட்டார்.

நீதியரசர் அவர்கள் பணிஓய்வு பெறுவதற்கு முன்பு இவரது பெயரை சென்னை உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி அவர்கள் (I.P.A.B) தலைவர் பதவிக்கும் அதேபோல மத்திய நிர்வாகத் தீர்ப்பாயத்தின் துணைத்தலைவர் பதவிக்கும் பரிந்துரை செய்திருந்தார் (I.P.A.B) முதலில் உத்தரவு வந்ததால் இதனையே ஏற்றுக்கொண்டார் மத்திய அரசும் உடனடியாக மத்திய நிர்வாகத் தீர்ப்பாயத்தின் துணைத்தலைவர் பதவியை ஏற்க கேட்டதற்கு தான் ஏற்கனவே (I.P.A.B) பதவி ஒப்புக்கொண்டதால் இதை ஏற்க இயலாது என தெரிவித்துவிட்டார்.

(I.P.A.B) தலைவர் பதவியை தான் ஏற்றுக்கொண்ட பிறகு பதவிக்கு தக்கவாறு எத்தனையோ இடர்கள் வந்த போதும் அத்தனையும் தனக்கே உரிய பாணியில் சமாளித்து துரிதமாக வழக்குகளை தீர்த்து தந்தார். இவரது வேகத்தை கண்ட தீர்பாயத்தின் வழக்கறிஞர்கள் இவரது பதவியை நீட்டிப்பு தர விரும்பி கேட்டும் இவர் மறுத்துவிட்டார்.

ஒரு குழந்தை பிறந்த பிறகு நல்ல குணங்களை சொல்லிக்கொடுத்து. இறை பக்தியை சொல்லிக்கொடுத்து சிறப்பான குணங்களோடு வளர்க்கும் பொறுப்பு ஒரு உன்னதமான குணங்களுடைய தாய்க்கு உண்டு.

அந்த குழந்தையை சான்றோனாக மாற்ற வேண்டியது தந்தையின் கடமையாகும் அந்த வகையில் மிகுந்த அதிர்ஷ்டத்தோடு ஸ்ரீமதி உண்ணாமலை அம்மையாருக்கும் திரு. சங்கரன் அவர்களுக்கும் மூன்றாவது மகனாக 1941 ஆம் வருடம் மார்ச் மாதம் 23-ந்தேதி பிறந்து தந்தைக்கும் தாய்க்கும் பெருமை சேர்த்தார்.

இன்றளவும் இவர்கள் உடன் பிறந்தவர்கள் தம்பதி சமையதராக உறவுகாரர்களின் சுப நிகழ்ச்சிகளுக்கு ஒன்றாகவே போவது ஒரு வாடிக்கையாக இருக்கிறது இப்படி ஒற்றுமை குலையாமல் பாசபிணைப்போடு செல்லும் இடங்களில் கண் திருஷ்டி பட்டு விடப்போகிறது என்று சொல்லும் அளவிற்கு இவர்களது பாசம் இருக்கும்.



நமது நீதியரசர் சிறந்த பக்திமான் திருச்செந்தூர் தங்கத்தேர் முதல் சென்னை மந்தவெளி ஐயப்பன் கோயில் தேர் இழுப்பது வரை ஆனந்தம் கொள்பவர். செட்டிநாட்டு அரசர் திரு. ஸ்ரீ. எம். எம். இராமசாமி செட்டியார் அவர்கள், பின்னி மில் சேர்மன் திரு. ஸ்ரீ நந்த கோபால் அவர்கள், திரு. நல்லி. குப்புசாமி செட்டியார் அவர்கள், திரு. வி.ஐ.டி. வேந்தர், திரு. ஸ்ரீ ஜி. விஸ்வநாதன் அவர்கள், தூர்தர்ஷன் இயக்குனர் அவர்கள், ஸ்ரீ. ஏ. நடராஜன் போன்ற ஜாம்பவான்களின் நட்பைக் கொண்டவர்.

நீதியரசர் அவர்களது துணைவியார் ஒரு சிறந்த சமையல் கலை வல்லுனர் ஏன் இது பதிவிடப்படுகிறது என்றால் நமது நீதியரசர் வழக்கறிஞராக இருந்த காலத்திலேயே மாதம் ஒருமுறை அல்லது இரண்டு முறையோ தனது நண்பர்களுக்கு விருந்து கொடுப்பார் அதேபோல நீதியரசரான போதும் நீதியரசர்களை அழைத்து விருந்து கொடுப்பார்.

குறிப்பாக திடீரென வெளிமாநில நீதியரசர்கள் யாராவது வந்தாலும் அவர்களுக்கும் விருந்து படைத்திடும் ஆற்றலை ஸ்ரீமதி மோகனா பெற்றவர். ஒவ்வொரு வருடமும் தன் இல்லத்தரசியை அழைத்துக்கொண்டு வெளிநாடு செல்வதை வாடிக்கையாக கொண்டிருக்கிறார்.





கல்வி கூடங்களிலிலிருந்து சிறப்பு விருந்தினராக அழைத்தால் விரும்பி சென்று மாணவர்களுக்கு சிறந்த அறிவுரை வழங்குவதில் இவருக்கு நிகர் இவரே. கண்ணைக்கட்டிக்கொண்டு கையில் கோலை பிடித்து நிற்கும் நீதி தேவதை மாதிரி இவரது வாழ்க்கையும் அமைந்தது இறைவனின் கருணை முதுமலையில் பேரக்குழந்தைகளுடன் நமது நீதியரசர்.



இவர்கள் குடும்பத்தார் அனைவருமாக சேர்ந்து குலதெய்வ கோயிலை புதுப்பித்து கும்பாபிஷேகம் செய்துள்ளனர். இறை திருப்பணியில் இன்றும் தன்னை ஈடுபடுத்தி கொண்டிருப்பவர். எந்த சூழ்நிலையிலும் எவரிடத்திலும் யாராக இருந்தாலும் அவர்கள் நீதிக்கு புறம்பான விவகாரங்களில் சமரசம் செய்து கொண்டதில்லை என்பது அவரது புகழுக்கு ஒரு சாட்சியாக இன்றளவும் பேசப்படுகிறது.

வாழ்க்கையில் எதுவானாலும் எப்படி வருகிறதோ அதை அப்படியே ஏற்றுக்கொள்ளும் மன உறுதி கொண்டவர். இவரைபற்றி இன்றும் இவரை நன்குணர்ந்தவர்கள் இவரை போன்ற நேர்மையானவர்களால்தான் தைரியம் ஒரு கூடுதல் பலமாக இருக்கிறது என்பார்கள்.

எங்கும், எதற்காகவும் எந்த சூழ்நிலையிலும் பயமறியாதவர் என்பது இவருக்கு சிறப்பு. இவர் வாழும் பகுதியான சென்னை, அடையாறு, காந்தி நகரில் உள்ள பிள்ளையார் கோயிலும், ஸ்ரீமன் நாராயணன் திருக்கோயிலுக்கும் செல்வது வழக்கம். சிறந்த பக்திமானாக, நீதியரசராக, சமுதாயத்தின் மீது பற்றுள்ளவராக நாம் வாழும் காலத்தில் அவரோடு பயணிப்பது நமக்கு பெருமையாகும்.

நீதியரசரின் பார்வையில் வழக்குகள் ஏன் தாமதமாகிறது என்பதற்கு இவ்வாறான காரணங்களால் வழக்குகள் தாமதம் ஆகிறது என்றார் அவை யாதெனில்... ஒரு வழக்கை படிப்பதற்கு முன்பாக அந்த வழக்கை கையாளும் நீதிபதியின் மனபோக்கைப் படி என புகழ்பெற்ற கிரிமினல் வழக்கறிஞர் திரு. எத்திராஜ் அவர்கள் கூறுவார்.

ஒரு நீதிபதியின் பார்வை எப்படி இருக்கும் என்பதை தெரிந்து கொள்வது அவசியம் அதேசமயம் நீதிமன்றத்தை எப்படி சந்திப்பது வாதங்களை எடுத்து வைக்கும் முறை, சட்ட நுணுக்கங்கள், நீதியரசர்கள் மனோபாவம், அவர்களது அனுகுமுறை ஆகியவை ஒரு வழக்கறிஞர் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும் வழக்கறிஞராக இருக்கலாம் ஜுனியர்கள் முதலில் கிளார்க் வேலைகளைச் செய்ய கற்றுக்கொள்ள வேண்டும். அதுதான் சரியான அடிப்படை என்பதே ஜுனியர் வழக்கறிஞருக்கு தருகின்ற அறிவுரை.

அதோடு ஒரு வழக்கறிஞரின் திறமை, அனுகுமுறை, அனுபவம், ஆகியவற்றை கனித்து அவற்றின் அடிப்படையில் தேர்ந்தவராக மாறவேண்டும்.

எந்த வழக்கிலும் சட்டத்தை சற்று வளைக்கலாமே தவிர அதை முறித்துவிடக்கூடாது. வழக்குகள் தொடரப்பட்டால் அதற்கு தீர்ப்பு வழங்க பல வருடங்கள் ஆகும் என்பது கோர்ட் படி ஏறும் ஒவ்வொருவரின் அனுபவம்.

அதற்கு காரணம் வழக்குகளை விசாரிக்கின்ற போது வாதங்களை தேவையின்றி திரும்ப திரும்ப முன் வைக்கப்படுவதையும் அதே போல சம்மந்தமில்லா வாதங்களை முன்வைப்பதை நீதிபதிகள் ஊக்கப்படுத்தாமல் இருக்க வேண்டும். எதாவது ஒரு காரணத்திற்காக வழக்கு ஒத்திவைக்க வேண்டும் என்கிற சூழலில் ஓரிரு நாட்களுக்குமேல் தள்ளி வைக்கக்கூடாது.

ஒரு வழக்கு குறிப்பிட்ட நீதிபதியின் விசாரணைக்கு அவருடைய பட்டியலில் சேர்க்கப்பட்டால் அதை மதிக்க வேண்டுமே தவிர, அந்த நீதிபதியிடம் அந்த வழக்கு போகக்கூடாது என வழக்கறிஞர்கள் திரை மறைவு முயற்சிகளில் ஈடுபடக்கூடாது.

அதே போல நேரமின்மை என்கிற காரணத்தை காட்டி வழக்கை நீதிபதிகளும் ஒத்தி போடக்கூடாது. வழக்கு விசாரணை முடிவடைந்து தீர்ப்பு ஒத்தி வைக்கப்படும் நிலையில் அதிகபட்சமாக இரண்டு வாரங்களுக்குள் தீர்ப்பு வழங்கப்பட வேண்டும். சில நேரங்களில் விசாரணை முடிந்து தீர்ப்பு ஒத்தி வைக்கப்படும் நிலையில் அந்த நீதிபதி அந்த வழக்கிலிருந்து விலகக்கூடாது.

கீழ்கோர்ட்டில் தீர்ப்பு வழங்கி அது உயர்நீதி மன்றத்தில் முறையிடும் போது வழக்கிற்குரிய ஆவணங்களை கொடுக்காமல் காலம் தாழ்த்துவது, பல வாய்தா வாங்கிய பின் ஆவணங்கள் காணவில்லை என கூறுவது, தனது வழக்கு தோற்கும் என தெரிந்தால் இந்த வழக்கை வேறு நீதியரசருக்கு மாற்ற தலைமை நீதியரசரிடம் போராடுவது போன்ற காரணங்களாலேயே வழக்கு காலதாமதம் ஆகிறது.

எனது பணிக்காலத்தில் “ஐ நெவர் பிரீச் வித் அவுட் பிராக்டிசிங்” என கூறியவர், எனது பணிக்காலத்தில் நூறு சதவீதம் வழக்குகள் தாமதமில்லாமல் விசாரிக்கப்பட்டு தீர்ப்பு வழங்கியுள்ளேன் என்றார். 2009 -ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 10-ந் தேதி சென்னையில் வழக்கறிஞர்களுக்கும் காவல் துறையினருக்கும் நடந்த மோதல் பற்றி தனது கருத்தாக இவ்வாறு தெரிவிக்கிறார்.

சட்டத்தை காப்பாற்ற வேண்டியவர்கள், மற்றவர்கள் உரிமைகளை பாதுகாக்க வேண்டியவர்கள் என்பதை சில நேரங்களில் வழக்கறிஞர்கள் சமூகம் மறந்துவிட்டு தன்னிச்சையாக செயல்படுவதுதான் காவல் துறையினருடன் மோதலுக்கு அடிப்படை காரணமாக இருக்கிறது.

அதோடு பல வழக்கறிஞர்கள் நீதிமன்ற பணிகளை தாண்டி அமைப்பு, அரசியல் சார்ந்த பணிகள் என திசை மாறுவதும் அனைத்து அரசியல் கட்சிக்கும் சென்னை உயர்நீதி மன்றத்திலேயே கிளை அலுவலகத்தை ஏற்படுத்தி அவ்வப்போது கட்சி தலைமை இடும் உத்தரவுகளை நிறைவேற்றுவதாலும் பொது நலன் சார்ந்த வழக்குகள் கால தாமதத்திற்கு காரணமாக உள்ளது.

சில வழக்கறிஞர்களின் மோசமான செயல்பாடுகளால் நீதிமன்றத்திற்கு வெளியே நிற்க வேண்டிய காவல்துறை நீதிமன்றத்திற்குள் நுழைய வைத்தது. வழக்கறிஞர்கள் சங்கமும் உறுப்பினர்களின் அத்து மீறல்களை கேள்வி எழுப்பாமல் அரசியல் கட்சியைபோல செயல்படுவதும் வேதனைக்குரியதாக உள்ளது என்றார்.

நீதிபதியவர்களின் குடும்பம் ஒரு பல்கலைக்கழகம் என்றால் மிகையல்ல இறையருள் நிறைந்தவர்களுக்குதான் அதன் பலனை அனுபவிக்கும் அதிர்ஷ்டம் கிடைக்கும். எத்தனையோ குடும்பங்கள் இன்று அற்ப காரணங்களுக்காக உடன் பிறந்து ஒருதாய் வயிற்று பிள்ளைகளுக்குள் இறைவன் கொடுத்திருப்பதை திருப்தியோடு அனுபவிக்காமல் முரண்டுபிடித்து வாழுகிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு ஒரு பாடமாக நமது நீதியரசரின் குடும்பம் நல்லதொரு குடும்பமாக இறைவன் வாழ வாய்ப்பளித்திருக்கிறார்.



நமது நீதியரசருடன் பிறந்தவர்கள் ஐவர் மூன்று சகோதரிகள் இரண்டு சகோதரர்கள். மூத்தவர் ஸ்ரீமதி திலகவதி அவருடைய கணவர் திரு. நடேசன் நெடுஞ்சாலை துறையில் கண்காணிப்புப் பொறியாளர்.

இவர்களுக்கு இரண்டு மகன்கள் ஒருமகள் ஒருவர் வழக்கறிஞருக்கு படித்துவிட்டு சொந்தமாக தொழிலில் இறங்கிவிட்டார். மற்றொரு மகன் மருத்துவராக உள்ளார் மகள் ராதாமணியும் மருத்துவர்.

அடுத்த சகோதரி ஸ்ரீமதி. லீலாவதி. கணவர் திரு. துரைசாமி அவர்கள் வழக்கறிஞர், தனது மாமனார் திரு. அ. சங்கரன் முதலியார் அலுவலகத்திலேயே பணியாற்றியவர் இவர்களுக்கும் இரண்டு மகன்கள் ஒருமகள்.



மூன்றாவதாக நமது நீதியரசர் மாண்புமிகு. ச. ஜெகதீசன் அவர்கள் இவரது மனைவி ஸ்ரீமதி. மோகனா அவர்கள் இவர்களுக்கு ஒருமகன் இரண்டு மகள்கள். மகன் திரு. செந்தில் அவர்கள் உச்ச நீதிமன்றத்தில் வழக்கறிஞராக பணிபுரிகிறார். (மூன்றாவது தலைமுறை) இவரது மனைவி ஸ்ரீமதி. கீர்த்தி இவரும் வழக்கறிஞர்.



நான்காவது உடன் பிறந்த சகோதரர் திரு. யக்கியசாமி அவரது மனைவி ஸ்ரீமதி. வாசுகியாவர் இவர் சேலத்தில் டாடா கார் ஏஜென்ஸி, ட்ருசாய் ஆட்டோகேட், டைகர் டயர்ஸ், பெட்ரோல் பங்க், எம்.ஆர்.எப் டையர் ரீ ட்ரேடிங் என பல நிறுவனங்களை நடத்தி வருகிறார். இவருக்கு ஒரு மகன், ஒரு மகள்.



ஐந்தாவது சகோதரர் திரு. பெருமாள் வழக்கறிஞர் தன் தந்தையின் அலுவலகத்தை இவர் கவனித்துக்கொள்கிறார். இவரது மனைவி ஸ்ரீமதி ராதாமணி மருத்துவர். நமத நீதியரசரின் மூத்த சகோதரியான ஸ்ரீமதி திலகவதியின் மகளாவார். இவர்களுக்கு ஒரு மகன் ஒரு மகள் – மகன் வழக்கறிஞர் (மூன்றாவது தலைமுறை) மகள் பொறியாளர்.



கடைசி தங்கை ஸ்ரீமதி வசந்தா இவரது கணவர் திரு. கனகராஜ் அவர்கள் இவரும் வழக்கறிஞர் இவருக்கு இரண்டு மகள். ஒரு மகன், மகனும் வழக்கறிஞருக்கு படித்துவிட்டு வேறு வேலையில் சென்னையில் உள்ளார்.
ஒரு மகள் தற்போது அமெரிக்காவிலும் மற்றொரு மகள் சேலத்திலும் வாழ்கிறார்.



இப்படி அனைவரும் பாண்டவர்களைப்போல ஒற்றுமை குறையாமல் இன்றளவும் இறைவனால் வழங்கப்பட்டதை அல்லது கிடைத்ததை வைத்து வாழுகின்ற குடும்பமாக ஒரு நல்ல பாசப்பிணைப்பில் பின்னப்பட்ட சகோதரர் சகோதரிகளாக நமது சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டாக வாழ்கின்றனர்.

எதாவது ஒரு குடும்ப நிகழ்ச்சி என்றால் அனைத்து குடும்ப உறவுகளும் ஒன்றாகத்தான் போவது வழக்கம் தனித்தனியாக போகாமல் இப்படி அனைவரும் ஒன்றாக வருகிறீர்களே கண் திருஷ்டிபடும் என்பார்கள் உறவுகள் அனைவரும் சேர்ந்து ஒரு இடத்திற்கு ஒன்றாக போகும் மகிழ்ச்சியே தனி என்கிறார். நமது நீதியரசர்.

நீதியரசரின் வாழ்க்கை பயணத்தோடு இரண்டர கலந்து வந்தோம். அவரது வாழ்க்கை குறிப்பாக இளைய தலைமுறை கற்று தேற வழிகாட்டுகிறது. அவரது தந்தை அவருக்கு கொடுத்த முக்கியமான உபதேசம் நாளை என்று ஒன்று இல்லை என எண்ணி இன்று முடிக்க வேண்டியதை முடித்துவிட வேண்டும் என்பதாகும்.

அவரது வாழ்க்கை பயணத்தில் மற்றொன்று ஆழமாக தெரிவது மதிப்பில்லாத இடத்தில் அது அரசாங்க வழக்கறிஞர் பதவியாக இருந்தாலும் அன்றைய சட்ட மந்திரி திரு. பொன்னையன் அவர்கள் கெஞ்சி வலியுறுத்தி கேட்டும் பதவி வேண்டாம் என கூறும் துணிச்சலான குணம். தர்மத்தை நீதியை கடைபிடித்ததால் யாருக்காகவும் எதற்காகவும் எந்த சூழ்நிலையிலும் வளைந்து போக வேண்டிய அவசியமில்லாமல் வாழ்ந்தார். நேர்மையாக வாழ்ந்ததால் தைரியம் அவரது அடையாளமாக அனைவரும் போற்றுகிற சிறப்பான குணமாகவே இருந்தது.

வழக்கறிஞராக இருந்தபோது தனது தந்தை திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களிடமும் சீனியர் வழக்கறிஞர்களான திரு. ராமசாமி அவர்களிடமும் திரு. பராசரன் அவர்களிடமும் கற்றறிந்து பின்னாளில் அவர் நீதியரசராக அமர்ந்த போது எந்த தவறான வாதங்களையும் கண்டுபிடித்து விடும் ஆற்றலை பெற்றிருந்தார் என்பது கூடுதல் பலம் பள்ளி பருவத்தில் புஷ்பநாதன் தலைமை ஆசிரியர் அவரிடம் கற்றது உன்னை தனித்தீவாக நீ ஆக்கி கொள்ளாதே என்பது மனதில் ஆழமாக பதியவைத்துக் கொண்டார். பள்ளியின் ஆசிரியர் லக்ஷ்மணராவ் அவர்கள் மூலமாக நேரம் தவறாமை ஒழுக்கம் அதேபோல எதை எழுதுவதாக இருந்தாலும் சுத்தமாகவும், தெளிவாகவும் எழுதுவதை கற்றார்.

மாநில கல்லூரியில் பொருளாதாரம் படிக்கும்போது அத்துறையின் தலைவர் பேராசிரியர் திரு. வேலாயுதம் அவர்களிடம் எதிலும் பர்சனல் டச் இருக்க வேண்டும் என்பதையும் அதேபோல நினைவாற்றலை வளர்த்துக்கொள் என்பதை பேராசிரியர் மோகன் அவர்களிடம் கற்றுக்கொண்டதை ஆழமாக பதிய வைத்துக்கொண்டார்.

தன்னை சிறிது சிறிதாக மெருகேற்றியதன் பயனாக நீதிபதி பதவிக்கு வந்ததும் பெரிதும் உதவியாக இருந்ததை நினைவு கூறுகிறார். இவரது பெருமையை உணர மற்றொரு செய்தி தனது தந்தை மெட்ராஸ் பார் கவுன்சில் தேர்தலில் அதிக அளவில் வாக்குகள் பெற்று வெற்றியடைந்ததை போல இவரும் மெட்ராஸ் பார் அசோசியேஷன் செயலாளராக தேர்வாகி பார் அசோசியேஷன் 125 ஆம் ஆண்டு விழாவையும் தனது தந்தையின் நூற்றாண்டு விழாவினை மெட்ராஸ் பார் கவுன்சில் கொண்டாடியதிலும் கலந்து கொண்ட பாக்கியம் இவருக்கு அமையப் பெற்றது.

தனது தந்தை பெற்ற உயர்ந்த ரேங்க் ஆன ஃப்ரீமேஸனரியை இவரும் பெற்றார். மனைவியை மதிக்கவேண்டும் அவருக்கு முக்கியத்துவம் தரவேண்டும் என்பதை இவரது மனைவிக்கு மதிப்பளிக்கும் விதம் பற்றி தெளிவாக கூறியதிலிருந்து உணர முடிகிறது.

நீதியரசராக நல்ல குடும்ப தலைவராக, சமுதாய பற்றாளராக ஆன்மீகவாதியாக யாரும் குறை கூறாத நேர்மையாளராக தைரியத்தோடு வாழ்ந்து வருவதை நமது இளைஞர்கள் ஒரு பாடமாக எடுத்துக்கொண்டு வாழவேண்டும்.

அதோடு நமது நீதியரசருக்கு கலைகளின் மீதுள்ள ஆர்வம் அதிகம். நீதியரசரின் பின்னனி, குடும்ப பாரம்பரியம் ஆகியவை வலுவானவை நமது நீதியரசரின் தந்தை நீதி துறையில் ஒரு வழக்கறிஞராக புகழ்பெற்று அத்துறையில் மிகுந்த செல்வாக்கையும் பெற்றிருந்தார்.

ஒரு வழக்கறிஞருக்கு ஒரு மாவட்டத்தில் சேலத்து செம்மல் 1980-இல் விருது வழங்கப்பட்டது முதல் முறையாகும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உதவிக்கொள்வதற்காக உருவாக்கப்பட்டது. ஃப்ரீமேஸனரி என்ற அமைப்பில் அவர் உறுப்பினராக இருந்தார் அவரது தன்னலமற்ற சேவைக்காக அந்த அமைப்பின் மிக உயர்ந்த ரேங்க் அவருக்கு கிடைத்தது. தந்தையை போலவே நமது நீதியரசருக்கும் அந்த உயரிய விருது கிடைத்தது. சேலத்தில் ஏறக்குறைய ஒன்னேகால் ஏக்கரில் அழகிய தோட்டத்தை உருவாக்கி இரு நூறு பேர் அமரக்கூடிய அலுவலகம் மிகவும் நேர்த்தியாக பராமரிக்கப்பட்டு வந்தது.

திரு. அ. சங்கரன் முதலியார் அவர்களைப் போலவே நமது நீதியரசரும் மத சடங்குகளை மிகவும் நம்பிக்கையுடன் கடைபிடித்து வருகிறார். தனது தந்தைக்கு கிடைக்காத பாக்கியம் நமது நீதியரசருக்கு உயர் நீதிமன்ற நீதிபதியாகும் வாய்ப்பு கிடைத்தது. தந்தைப்போல் மாப்பிள்ளைகள் மகன்கள் பேரன்கள் என மூன்று தலைமுறையாக சட்டத்துறையில் தொடர்ந்து தங்களது பணியினை செய்துவருவது மிகச் சிறப்பாகும். அதே போன்று தந்தை வகித்த அசோசியேஷன் பதவியிலும் அமர்ந்து புகழ் சேர்த்தார்.

பணி நிறைவன்றே அறிவுசார் சொத்துரிமை மேல் முறையீட்டு அமைப்பின் தலைராக மூன்றாண்டுகள் பதவி முடித்து, வெளிநாடு, வெளி மாநில மாணவ மாணவியருக்கு தமிழக வாழ்க்கை, குடும்ப அமைப்பு பற்றிய ஒரு நேரிடை கண்ணோட்டம் ஏற்பட வழி வகுக்கும் அமைப்பு ஹாஸ்பிடாலிட்டி அசோஸியேஷன் என்கிற அமைப்பின் தலைவரானார்.

அதில் வெளிநாட்டிலிருந்து வரும் இளைய சமுதாயத்தினரை தமிழக குடும்பங்களோடு தங்க வைத்து அவர்கள் அந்த குடும்ப உறுப்பினர்களாகவே உணர வைத்து சில நாட்கள் உபசரித்து அனுப்பும் பணி கலாச்சார பரிவர்த்தனை மூலம் வருகின்றவர்களுக்கு ஹாஸ்பிடாலிட்டி அசோசியேஷன் பணி மகத்தானது. அதன் தலைவராக நமது நீதியரசரின் பணி மகத்தானது. நமது உறவாகவும் நமது இனத்தின் நம்பிக்கை நட்சத்திரமாகவும் சமுதாயத்தின் மீது அளவு கடந்த பாசத்தையும் தன்னகத்தே வைத்து நீதி பரபாலனம் செய்வதில் வல்லவராகவும் திகழ்பவர் மாண்புமிகு நீதியரசர் திரு. ச. ஜெகதீசன் அவர்கள்.

## சமுதாயத்தின் மீது பற்று

நமது நீதியரசரின் நேர்மையையும், கடின உழைப்பையும் அறிந்து பல பதவிகள் இவரை தேடி வந்தன வந்த பதவிகளுக்குத்தான் இவரால் பெருமைசேர்ந்தது என்பதே பொறுத்தமாக இருக்கும். தான் பிறந்த செங்குந்தம் எல்லா வகையிலும் மேன்மை அடைய வேண்டும் என நேற்றும் இன்றும் நாளையும் இவரது எண்ணமாகவே இருக்கிறது, இருக்கும் என்பதை இவருடன் உறவாடும் பொழுது அறிய முடிகிறது. அதில் ஒன்று நமது இனம் இனி தறியை நம்பி பயணில்லை கல்வி ஒன்றே வளிமையை கூட்டும் என்பதை ஆணித்தரமாக பதிவிட்டதும் அடங்கும்.

வழக்கறிஞராக வெற்றிகளை தனக்கே உரிய சாதுரியத்தால் கொடுத்து வந்த திரு. ச. ஜெகதீசன் அவர்கள் சென்னையில் வழக்கறிஞராக பணியிலிருந்து கொண்டு சமுதாயத்தின் வளர்ச்சிக்கும் செயல்பட்ட விதம் மிகவும் பாராட்டுக்குரியது.

இன்றைய காலகட்டத்தில் ஊரடங்கு காலத்தில் வறுமையில் வாடும் ஏழை நெசவாளர்கள் பசியை போக்கின்ற வகையில் ரூபாய் ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் தனது பங்காகவும் தனது நெருங்கிய நண்பரான பின்னி மில் சேர்மன் திரு. ஸ்ரீ. நந்தகோபால் அவர்களின் சார்பாக ரூபாய் ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் வாங்கி கொடுத்து இந்த கொரானா காலத்தில் தாய் உள்ளத்தோடு ஏழ்மை நிலையில் உள்ள செங்குந்த நெசவாளர் குடும்பங்களுக்கு உதவினார்.

சபாபதி பள்ளியை உருவாக்கிய பெரும்பங்கும் இவரையே சாரும். நீதியரசராக பதவி வகுத்தபோதே செங்குந்தர் சங்கத்தின் மதுரை மாநாட்டில் துணிச்சலோடு கலந்துகொண்டவர். தனக்கு இறைவன் கொடுத்த பரிசாக ஸ்ரீமதி மோகனா அவர்களின் அன்பும் அரவணைப்பும் தன் தாய்க்கு பிறகு கிட்டியது எத்தனை விருந்தினர்கள் வந்தாலும் உணவை தயாரித்து இன்முகத்தோடு பரிமாறுவதும் சிறப்பாகும்.

1994-ல் சென்னை தி.நகர் பனகல் பார்க்கில் எதிரில் நடைபெற்ற நெசவாளர் எழுச்சி பேரணி பொதுக்கூட்டத்தில் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக இருக்கும்போதே எதை பற்றியும் கவலை கொள்ளாமல் கலந்துகொண்டவர்.



தலைவர் ஜெ. எஸ். அவர்களுடன் தனக்கிருந்த நட்பும் புரிந்துணர்வும் அதிகம். எந்த நேரத்திலும் எந்த பிரச்சனையாக இருந்தாலும் எப்போது வேண்டுமானாலும் நீதியரசரை தொடர்பு கொள்ளும் அளவிற்கு இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்து

வைத்திருந்ததை பெருமையாக தெரிவித்தது மகிழ்ச்சியான தகவல். ஒரு நல்ல மனிதரை இழந்துவிட்டேன் என வருத்தத்துடன் கூறினார். அவர் இருக்கும் வரை சங்கம் மற்றும் சட்ட உதவிக்கு என்னை மட்டுமே அனுகும் அளவிற்கு அவரது செய்கை இருந்தது என்றார். அவரை பற்றி மேலும் கூறுகையில் நமது சமுதாய இளைஞர்களின் கல்வி கண்ணை திறந்தவர் என்றார்.



வாரியார் நினைவு நிகழ்ச்சி என்றாலும் சங்கத்தின் பல முக்கிய நிகழ்வுகள் என்றாலும் கலந்து கொண்டு சிறப்பு செய்தவர் தலைவர் ஜெ. எஸ். அவர்களோடு நல்ல உறவுடனும், நட்புடனும் இருந்தவர் திரு. பொன்னுசாமி அவர்கள் சங்கத்தன் மேல் போட்ட தவறான வழக்கில் சரியான பாதைகளை தலைவர் ஜெ. எஸ். அவர்களுக்கு நமது நீதியரசர் காட்டியதை கூறலாம்.

இப்படி ஒவ்வொரு நிகழ்விலும் ஒரு காலகட்டத்தில் இவரது இருப்பை அடையாளமாக வைத்துள்ளது நமது இனத்திற்கு கிடைத்த பெருமையாகும் பல நேரங்களில் சங்கத்தின் வளர்ச்சியில் உறுதுணையாக இருந்தார். செங்குந்தர் சங்க சமுதாயத்தின் பேரில் மிகப்பெரிய நல் எண்ணமும் மற்றும் அக்கறையும் அவர் வழக்கறிஞர் காலத்திலிருந்தே வந்தது. காரணம் அவரது தந்தை திருமிகு. அ. சங்கரன் அவர்கள் சேலம் மாவட்ட செங்குந்தர் சங்கத்தின் புரவலராக இருந்த காலத்தில் பல கூட்டங்களில் கலந்து கொண்டார்.

தனது தந்தை சென்னையில் பத்மஸ்ரீ. நாச்சிமுத்து முதலியார் அவர்களை சந்திக்கும் போதெல்லாம் இவரும் உடன் சென்று அவர்களது கலந்தாலோசனைகளில் பங்கு பெற்றார். அதன் காரணமாக அங்கு பத்மஸ்ரீ. நாச்சிமுத்து முதலியார் உடன் இருந்த தலைவர் ஜெ. எஸ். அவர்களின் நட்பும், அன்பும் கூடியது நீதியரசரின் எண்ணம் மற்ற ஜாதிகளை விட நமது இனத்தில் ஒற்றுமை குறைந்திருப்பதில் அதிக கவலை கொண்டிருப்பதை சமீப காலங்களில் அவரிடம் உரையாடும் போது தெரியவருகிறது.

சென்னை ஆரிங்டன் சாலையில் தி.மு.க. அறக்கட்டளைக்கு சொந்தமான இடத்தை காஞ்சி மணிமொழி செங்குந்தரின் வேண்டுகோளை ஏற்று அறிஞர் அண்ணா அவர்கள் 19 கிரவுண்டு 1215 சதுர அடி நிலத்தை திரு. நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் மூலமாக தென்னிந்திய செங்குந்த மகா ஜன சங்கத்திற்கு 1960-இல் கிரையமாக கொடுத்தார். கிரைய பத்திரம் எண். 3611/1960.

பத்மஸ்ரீ நாச்சிமுத்து ஐயா அவர்கள் சென்னையில் தி.மு.க. அறக்கட்டளையிடம் காஞ்சி மணிமொழியாரின் வேண்டுகோளை ஏற்று தென்னிந்திய செங்குந்த மகா ஜன சங்கத்திற்கு அறிஞர் அண்ணாவால் கிரையம் பெற்ற இடத்தை 1983-இல் சங்கரன் கோயிலில் நடைபெற்ற செங்குந்த மகா ஜன சங்க மாநில செயற்குழுவில் பத்மஸ்ரீ. நாச்சிமுத்து முதலியார் சபாபதி வளாகம் ரவுடிகளின் தொந்தரவு அதிகமாகவும் அங்கே காலிமனையாக உள்ளதால் தவறான நிகழ்வுகள் நடக்கிறபடியால் இடத்தை விற்று விடலாம் என முடிவு செய்ததை தனது தந்தையும் ஆதரவை அளித்தார் என அறிந்து அதனை தடுக்கும் பொருட்டு அன்று இரவே அன்றைய தென்னிந்திய செங்குந்த மகா ஜன சங்க பொதுச்செயலாளர் திருமிகு. T.R. செல்வராஜ் அவர்கள் நமது நீதியரசரை சந்தித்து ஆலோசனை செய்தபின் மீண்டும் சென்னையில் ஒரு எதிர் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யச்சொல்லி அதில் திரு. M.M. தணிகைமலை, திரு. M.S. ரங்கையா போன்ற பிரபலங்களை வரவழைத்து தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என வாழ்ந்து வந்த நமது நீதியரசர் முதல் முறையாக தந்தை ஆதரவு தந்த செங்குந்த வளாக விற்பனையை சென்னையிலிருந்தவாறே தடுத்தார். அந்த இடம் பல ஆண்டுகளுக்கு பிறகு பல நூறு கோடி போகும் என்கிற தீட்சன்யத்துடன் தடுத்து நிறுத்தியதில் முக்கிய பங்கு நமது நீதியரசரையே சாரும்.

அன்றைய நாளில் சென்னை பல்கலைக்கழகத்தின் பதிவாளர் திரு.சி.கே. குமாரசாமி (ஈரோடு) அவர்களின் உதவியோடு ஆரிங்டன் சாலையில் உள்ள இடத்தில் ஒரு ஆங்கில பள்ளியை ஆரம்பிக்க பாடுபட்டு தமிழகம் முழுவதும் நிதி திரட்டப்பட்டு விற்பனை தடுத்து நிறுத்தப்பட்டது.

திரு. ச. ஜெகதீசன் அவர்கள் தடுத்திராவிட்டால் அந்த இடம் சங்கத்தின் கையை விட்டு போயிருக்கும். நமது நீதியரசர் இச்சமுதாயத்தின் பேரில் கொண்ட பாசத்தால் பற்றால் அவரது முதல் பணியாகும். சபாபதி பள்ளி வளாகத்தை காப்பாற்றிய நிகழ்விலிருந்து ஆரம்பமானது. நமது நீதியரசரின் நீதி பரிபாலனம் ஒரு கண்ணாகவும் செங்குந்த சமுதாயம் வளர்ச்சி ஒரு கண்ணாகவும் செயல்பட்டதை தெளிவாக பார்க்கலாம்.



04-12-1983 இல் பல்கலைப் பதிவாளர் திரு. சி.கே. குமாரசாமி அவர்களையே பள்ளியின் தாளாளர் பொறுப்பை ஏற்க வைத்து சபாபதி பள்ளி துவக்கப்பட்டதற்கு முக்கிய காரணமாக திகழ்ந்தவர் மரியாதைக்குரிய திரு. ச. ஜெகதீசன் அவர்களின் சமுதாய தொண்டு பாராட்ட வார்த்தைகளே இல்லை. இவரது பங்களிப்பை இவரது தெளிவான எண்ண ஓட்டத்தை சங்கத்தினர் ஆலோசனை பெற்றால் பல வகைகளில் தென்னிந்திய செங்குந்த மகா ஜன சங்கம் சிறப்படையும். இவரது நட்பும் சான்றோர்கள் இவரிடம் காட்டிய அன்பும், இவரது இறை பக்தியும் மிகையானது. சமுதாயத்தின் பேரில் இன்றுவரை தனி பாசம் கொண்டவர்.

# சபாபதி பள்ளி வளாகம்



நமது சங்கத்தின் அன்றைய பொது செயலாளராக இருந்த திரு. T.R. செல்வராஜ் அவர்கள் சென்னை கிரிஸ்டியன் கல்லூரி தமிழ் பிரிவின் **HOD** யாக இருந்த அறிஞர். இவருக்கு பிறகு சங்கத்தின் பொது செயலாளராக வந்தவர் திரு. மயில் வாகணன் **IAS** அவர்கள்

தமிழகத்தின் வேலைவாய்ப்பு துறையின் தலைவராக இருந்தவர். பொருளாளராக திரு. **M.S.** ரங்கையா அவர்களும் துணைத்தலைவராக திரு. **M.M.** தனிகைமலை போன்றவர்கள் இருந்ததும் நமது சங்கம் வலிமை பெற்றிருந்தது.

அன்றைய செயலாளர்களாக இருந்தவர்களுக்கும் இந்த காலகட்டத்தில் கல்வியாளர்கள் யாராவது அப்பதவியை ஏற்றிருந்தால் மீண்டும் சபாபதி பள்ளியை லீசுக்கு விட முயற்சித்த அவலம் ஏற்பட்டிருக்காது என்பது கருத்து.

அன்றைய சென்னை பல்கலைகழக ரிஜிஸ்டர் உதவியுடன் சபாபதி வளாகத்தில் ஆங்கில பள்ளிக்கு அனுமதியை பெற்று ஆரம்பித்த வரலாறு தொடங்கி, நீதியரசராக பதவி ஏற்ற பிறகும் மதுரையில் நடந்த மாநாட்டிற்கு தலைவர் ஜெ. எஸ். அவர்களுடன் பேரணியில் கலந்து நடந்து சென்றார்.

# செங்குந்தர் மாநில மாநாடு, மதுரை - 1995
# செங்குந்தர் சுடரொளி விருது வழங்கல்

செங்குந்தர் மாநில மாநாடு, மதுரை - 1995

**செங்குந்தர் சுடரொளி விருதுவழங்கல்**

இரவு : 7.30 மணி

வழங்கிவாழ்த்துபவர் : **மாண்புமிகு நீதியரசர் எஸ். ஜெகதீசன்**
(சென்னை உயர் நீதி மன்றம்)

வாழ்த்துரை : **திரு. ஜி.கே. மூப்பனார், எம்.பி.**
**திரு. ஏ.ஜி. எஸ். ராம்பாபு, எம்.பி. மதுரை**
**திரு. ஏ. தெய்வநாயகம், எம்.எல்.ஏ. மதுரை.**

**விருது பெறும் விற்பன்னர்கள்.**

மாண்புமிகு நீதியரசர் : **திரு.டி.என். சிங்காரவேலு - நீதி**
**(சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி (ஓய்வு)**

**திரு. எம். எத்துராஜன் - தொழில் (சேர்மன் பின்னிமில்ஸ்)**

**திரு. எஸ்.பி. சம்பந்தம் - தொழில் (மேலாண்மை பங்குதாரர், சம்பந்தம் மில்ஸ்)**

**திரு. கே.கே. ராமசாமி - தொழில் (மேலாண்மை இயக்குநர், ஷார்ப் நிறுவனம்)**

**முனைவர் சி. பாலசுப்ரமணியன் - கல்வி**
**(முன்னாள் துணைவேந்தர், தஞ்சை தமிழப் பல்கலைக்கழகம்)**

**திரு. டி.ஏ.எஸ். பிரகாசம் ஐ.ஏ.எஸ் (ஓய்வு) - சமூகத் தொண்டு**
**(தலைவர் : சமுதாயப் பொருளாதரத் தொண்டு மன்றம்)**

**திரு. ந. கோவிந்தசாமி - பல்கலை**

**டாக்டர். எம். பெரமநாதன் - மருத்துவம்**

**டைரக்டர் ஏ. ஜெகந்நாதன் - சினிமா**

**திரு. எம்.எம். தணிகைமலை - சங்கப்பணி**

**திரு. ச.கு.பா. பழனிவேலு - சங்கப்பணி**

**திரு. குறிஞ்சிவேலன்- சாகித்ய அகாதெமிப்பரிசு**

**திரு. பி.கே. சாமிநாதன் - தமிழக அரசு பரிசு பெற்ற நூலாசிரியர்**
**மற்றும் மாநில மாவட்டப் பொறுப்பாளர்களுக்குச் சிறப்புச் செய்தல்**

நன்றியுரை : **திரு. எம்.பி. பாண்டுரங்கம்**
**(மாநிலதுணைப் பொதுச் செயலாளர்)**

கலைவிருந்து : **சினிமா புகழ் மீசை முருகேசன் குழுவினர் இசை**
**மற்றும் செயல்வீரர் எம். சந்தானம் வழங்கும்**
**'கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்' - நாடகம்**



னனி மிலஸ் சேர்மன் திரு. எம. எத்துராஜன் அவர்க
நீதியரசா திரு.S.ஜெகதீசன். "செங்குந்தர் சுடரொளி" என

அதோடு பேரணி முடிவில் அரசாங்க கெஸ்ட் அவுஸில் தலைவரும் நமது நீதியரசரும் ஓய்வெடுத்தபோது தலைவர் நீங்கள் இன்று உயர் நீதிமன்ற நீதிபதியாக இருப்பதால் மாநாட்டு மேடைக்கு வரவேண்டாம் என தடுத்ததை மேடையில் தலைவர் கூறியதற்கு நமது நீதியரசர் மாநாட்டு மேடையில் இவ்வாறு பதிலளித்தார்.



குந்தர் சுடரொளி" என்ற விருதினைச் சென்னை உயர்நீ
நீதியரசர் திரு. S.ஜெகதீசன் அவர்கள் நீதியரசர் திரு. T.

நீதியரசர் பதவி வெறும் ஒன்பது வருடங்களுக்கு மட்டும்தான் ஆனால் செங்குந்தர் என்பது எனது பிறப்பு காலம் முதல் உள்ளது என் உடலோடும் உணர்வோடும் கலந்தது. என கூறியபோது அரங்கத்தில் உறவுகளின் கரகோஷங்களால் மாநாட்டு மேடையும் தாண்டி மதுரை முழுவதும் அதிர்ந்தது




அதோடு நிற்காமல் பல சங்க விழாவிலும், சென்னை தி. நகர் பனகல் பார்க்கில் நடைபெற்ற நெசவாளர் எழுச்சி பேரணியிலும் பொது கூட்ட மேடையிலும் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்.

வாரியார் நினைவு அஞ்சலி கூட்டத்திலும் கலந்து கொண்டார். அவ்வஞ்சலி கூட்டத்தில் தலைவர் திரு. ஜெ. எஸ். சங்கரநாராயணன், திரு. பி.எஸ். நடராஜன் போன்றோர் கலந்து கொண்டார். ஈரோடு செங்குந்தர் காலேஜ் பட்டமளிப்பு விழாவில் தலைவர் திரு. ஜெ. எஸ். அவர்களுடன் கலந்து கொண்டு மாணவர் களுக்கு பட்டமளித்து சிறப்பு செய்தார்.



கல்விக்கு முக்கியமளித்து பல நேரங்களில் நமது சமுதாய கூட்டங்களில் பேசுவதில் இன்றளவும் விருப்பமுள்ளவர். ஈரோடு தமிழ் வட்டம் அமைப்பு சார்பில் நமது நீதியரசருக்கு வாழும் கல்விச்செம்மல் விருது நமது தலைவர் திரு. ஜெ. எஸ். அவர்கள் தலைமையில் நடைபெற்ற சிறப்பு விழாவில் வழங்கப்பட்டது.


ஈரோடு தமிழ் வட்டம் அமைப்பு ஜெகதீசன் அவர்களுக்கு

அம்பா சங்கர் கமிஷன் நடந்தபோது தலைவர் திரு. ஜெ.எஸ். அவர்கள் நம்மை மிகவும் பிற்படுத்தப்பட்ட சமூகமாக அறிவிக்க தமிழகம் முழுவதும் சுற்றி வந்த வீடியோ எடுத்து வந்ததை எதிர்த்து வன்னியர் சங்க பிரமுகர் வன்னியரசு என்பவர் மிகப்பெரிய தாக்குதலை நடத்தி தலைவர் மீதும் மற்றவர்கள் மீதும் வழக்கு போடும்படி செய்தார்.

அன்றைய காலகட்டத்தில் நமக்கு நீதியரசர் துணையில்லாமல் இருந்திருந்தால் வழக்கை சந்தித்தும் நம்மை **FORWARD CLASS** க்கு மாற்றியும் இருப்பார்கள். அவ்வளவு பெரிய உதவியை செய்து தந்தார். இன்று அந்த நிகழ்வுகள் பற்றி ஒரு சிலருக்குத்தான் தெரியலாம்.

சாதாரணமான உதவியல்ல அந்த உதவி, அதற்காக ஒட்டு மொத்த செங்குந்த சமுதாயமும் அவருக்கு செங்குந்தம் உள்ளவரை நன்றி செலுத்த வேண்டும். அதன் அருமை இன்றைய சங்கத்தில் இருப்பவர்களுக்கு எதுவும் தெரிய வாய்ப்பில்லை ஒரு சிலரைத்தவிர, தலைவர் ஜெ.எஸ். தமிழகம் முழுவதும் சுற்றி வீடியோ எடுத்து வரும் வழியில் மிகப்பெரிய விபத்து நடந்து அதில் இருவர் மரணமடைந்தனர். தலைவர் மதுரை ஆஸ்பத்திரியில் சிகிச்சை முடித்து நார்மலாக வருவதற்கு ஐந்து மாதங்கள் ஆனது. அதோடு விபத்தில் வந்த இன்சூரன்ஸ் தொகை முழுவதும் சங்க கணக்கில் வரவு செய்தார் என்பது பதிவு.

அன்றைய தலைமை செயலத்தில் இருந்த ஸ்ரீ T.R. ராமசாமி,IAS. அவர்கள் மற்றும் ஸ்ரீ சங்கரசுப்பையன், IAS அவர்களும் அன்றைய காவல் துறையை சார்ந்த ஸ்ரீ. ஞாணசம்மந்தம், IPS அவர்களுடன் கலந்து நீதியரசரின் வேண்டுகோளை ஏற்று பல உதவிகளை செய்தார் என்பதும் பதிவில் உள்ளது.



04 செங்குந்தர் ஆசிரியர் பயிற்சி நிறுவனத்தின் புதிய பள்ளிக்

2004 ஆம் வருடம் சேலம் மாவட்டம் தாரமங்களத்தில் செங்குந்தர் ஆசிரியர் பயிற்சி நிறுவனத்தை மாண்புமிகு நீதியரசர். திரு. ச. ஜெகதீசன் அவர்கள் கரங்களால் திறந்து வைத்தார். உடன் மரியாதைக்குரிய தலைவர் திரு. ஜெ. சுத்தானந்தன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்.

நீதியரசரை பொருத்தவரை சமுதாயம் எல்லா வகையிலும் சிறப்படைய வேண்டும். என்கிற எண்ணம் இன்றளவும் உள்ளதை அவரை நன்குணர்ந்தவர்களுக்கு தெரியும் அன்றைய நாளில் தலைவர். ஜெ. எஸ். அவர்கள் நமது நீதியரசர் மீது மிகுந்த மரியாதையை வைத்திருந்தார்.

நமது நீதியரசரும் தலைவர் மீது நல்ல புரிதலுடன் அன்பு கொண்டிருந்தார். திரு. பொன்னுசாமி அவர்கள், தொடர்ந்த வழக்கில் தலைவர் ஜெ. எஸ். அவர்களுக்கு தக்க ஆலோசனை வழங்கி சில சிக்கலை தீர்த்து வைத்தார்.

இப்படி ஒவ்வொரு காலகட்டத்திலும் சங்க செயல்பாட்டில் தன்னால் ஆன நல்லதை செய்தவர் என்பது நமக்கு பெருமையான தகவலாகும். சமுதாய பொருளாதார தொண்டு மன்றத்தை திரு. ஸ்ரீ DAS. பிரகாசம், IAS அவர்கள் ஆரம்பிக்க மிகுந்த சிரமத்திலிருந்த போது நமது நீதியரசரின் ஆலோசனைகளாலும் நமது நீதியரசரின் தந்தை திரு. அ. சங்கரன் முதலியார் அவர்கள் உதவிகளாலும் அது ஆரம்பமாகியது என்பதுதான் இன்றளவும் பதிவாக இருக்கிறது.





07-03-2011 அன்று திருமழைசையில் நாட்டாண்மை பட்டமளிப்பு விழாவில் கலந்து கொண்டு 18 கிராமத்தை சார்ந்த செங்குந்தர்களால் தேர்வானவருக்கு நாட்டாண்மை பட்டம் வழங்கிய போது. உடன் திரு. ஆ. இராஜவேலு அவர்கள்.



2019 டாக்டர். ந. கோவிந்தசாமி புதுச்சேரி அவர்களின் நூற்றாண்டு விழாவில் நமது நீதியரசர் மாண்புமிகு. ச. ஜெகதீசன் அவர்கள் உடன் புதுச்சேரி சபாநாயகர் மாண்புமிகு. வி.பி. சிவக்கொழுந்து மற்றும் புதுச்சேரி மாநில செங்குந்தர் கல்வி அறக்கட்டளையின் தலைவர் திரு.வி.பி.ராமலிங்கம் அவர்கள்





அந்த கூட்டத்தில் புதுவை சபாநாயகர் தலைமையில் நடந்தது. 100 ஆண்டுகளை கடந்து வாழ்ந்த டாக்டர். ந. கோவிந்தசாமி அவர்கள் ஏற்புரை ஆற்றினார்கள். திருமதி. வசந்தா சுத்தானந்தம் அவர்கள் பின்னி மில் சேர்மென். திரு. நந்தகோபால் அவர்கள் தொண்டு மன்ற தலைவர் திரு. ஆர். இராமகிருஷ்ணன் அவர்கள், திரு. ஆரணி. சிவா புதுச்சேரி தலைவர் திரு. வி.பி. இராமலிங்கம் போன்றவர்கள் கலந்து கொண்டார்கள்.



இவர் இன்றைய நாளில் முக்கியமான விழாக்களில் தலைமை தாங்கவோ, பரிசளிக்கவோ சிறப்புரை ஆற்றவோ, அவருக்கு அழைப்பிதழ்கள் தினந்தோறும் அணிவகுக்கின்றன. பல விதங்களில் உற்சாகமாக பயணிக்கும் நமது நீதியரசர் புதுச்சேரி டாக்டர். திருமிகு. நா. கோவிந்தசாமி முதலியாரின் நூற்றாண்டு விழாவில் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்.



புதுச்சேரி டாக்டர். ந. கோவிந்தசாமி அவர்களின் நூற்றாண்டு விழாவில்
திருமதி. வசந்தா சுத்தானந்தம் மற்றும் பாபுஜியுடன்
கலந்து கொண்ட நிகழ்வின் பதிவு.



2018 -இல் ஜெயங்கொண்டத்தில் மாவட்ட கல்வி ஊக்கப்பரிசு கொடுக்கும் முப்பெரும் விழாவில் தற்போதைய திருப்பத்தூர் மாவட்ட ஆட்சி தலைவர் திரு. சிவன் அருள் அவர்களுடன் கலந்து கொண்டு மாணவர்களுக்கு ஊக்க பரிசு கொடுத்ததோடு தலைமைதாங்கி மாணவர்களுக்கு கல்வியின் முக்கியத்தை கூறினார்.



2015 -இல் நீதியரசர் அவர்கள் போதே ஜெயங்கொண்டம் கல்வி பரிசளிப்பு நிகழ்வில் கலந்து கொண்ட நிகழ்வின் போது எடுத்த பதிவு.



ஈரோடு மாவட்ட கல்வி ஊக்கப்பரிசு கொடுக்கும் முப்பெரும் விழாவில் கலந்து கொண்டு மாணவர்களுக்கு ஊக்க பரிசு கொடுத்ததோடு தலைமைதாங்கி மாணவர்களுக்கு கல்வியின் முக்கியத்தை கூறினார்.



சதம் கண்ட குந்தர் சங்க புத்தக வெளியீட்டு விழாவில் நமது நீதியரசருக்கு மாண்புமிகு நீதியரசர் திரு. ரா. சுதாகர் அவர்களின் மாமனாரும், குடியாத்தம் கல்வி வேந்தர் திரு. கே.எம்.ஜி. கோவிந்தராஜ முதலியாரின் மகனுமாக திரு. பாலசுப்ரமணியன் அவர்கள் மரியாதை செய்த போது.



05-10-2019 அன்று காலை புதுச்சேரி ஓட்டல் கிரீன் பேலஸில் நடைபெற்ற செங்குந்தர்களின் கடந்த நூறாண்டுகளின் வளர்ச்சியும் எழுச்சியும் உள் அடக்கி தொகுத்த புதுச்சேரி பாபுஜி அவர்களது புத்தகத்தை தனத பொற்கரங்களால் சதம் கண்ட குந்தர் சங்கம் நூல் வெளியீட்டின் போது புதுச்சேரி சபாநாயகர் மாண்புமிகு. வி.பி. சிவக்கொழுந்து அவர்கள் மற்றும் புதுச்சேரி மாநில செங்குந்தர் சங்க தலைவர் திரு. வி.பி. இராமலிங்கம் அவர்கள், பின்னி மில் சேர்மென் திருமிகு. நந்தகோபால் அவர்கள் மற்றும் சென்னை உயர்நீதிமன்ற மூத்த வழக்கறிஞர் திரு. கே. ஏ. இரவீந்திரன் இவர்களுடன் நீதியரசர் மாண்புமிகு. ச. ஜெகதீசன் அவர்கள்



ஆரணியில் மாவட்ட கல்வி ஊக்கப்பரிசு கொடுக்கும் முப்பெரும் விழாவில் கலந்து கொண்டு மாணவர்களுக்கு ஊக்க பரிசு கொடுத்ததோடு தலைமைதாங்கி மாணவர்களுக்கு கல்வியின் முக்கியத்தை கூறிய நிகழ்வின் பதிவு : **நீதியரசரின் பொருளாதார மன்றத்தில் பங்களிப்பு**



சென்னையில் தொண்டு மன்ற சென்னையில் நடத்திய மாநில செயற்குழு கூட்டத்தில் கலந்து சிறப்பான ஆலோசனையை வழங்குவதை வாடிக்கையாக கொண்டிருக்கிறார்.



நெய்வேலி நிலக்கரி சுரங்கப் பொது மேலாளர் திரு. மோகன் அவர்களுடன் புதுச்சேரி சதம் கண்ட குந்தர் சங்கம் புத்தக விழா நிகழ்ச்சியில் தனது கடும் முயற்சியால் உருவாக்கப்பட்ட வள்ளல் சபாபதி பள்ளியை ஒரு பல்கலை கழகமாக தனது காலத்தில் மாற்றிட எண்ணம் கொண்டிருக்கிறார். கொரானா ஊரடங்கு காலத்தில் தன் கருணை உள்ளத்தால் உயர்ந்து என்றுமே இச்சமுதாயத்தின் நலனில் அக்கரைகொண்டு தெளிவாக பதியவைத்து வருகிறார் என்பது தெரிகிறது.



நீதியரசர் காஞ்சிபுரத்தில் கல்வி நிதி வழங்க சென்ற போது பென்னாடம் திரு. ஆ. இராஜவேலு மற்றும் காஞ்சிபுரம் செயற்குழு உறுப்பினர் திரு. தணிகாசலம் அவர்களுடன்





26-08-2006 அன்று வாரியார் சுவாமிகளின் நூறாண்டு நிறைவு விழாவினை சமுதாய பொருளாதார தொண்டு மன்றம் சிறப்பாக கொண்டாடியது. அதில் நமது நீதியரசர் உள்பட மாண்புமிகு முன்னாள் இந்து அறநிலையத்துறை அமைச்சர் உள்பட மாண்புமிகு தொழிலாளர் துறை அமைச்சர் திரு. தா.மோ. அன்பரசு அவர்களும் சட்ட மன்ற உறுப்பினர்களான திரு. ஈ.எஸ்.எஸ். இராமன் மற்றும் திரு. சிவராஜ் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள் தொண்டு மன்ற செயலாளர் திரு. இராமகிருஷ்ணன் அவர்கள் வரவேற்பை நிகழ்த்தினார். சென்னையில் வாரியார் சிலை அமைக்க மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் ரூபாய் ஆயிரத்தை நமது நீதியரசரிடம் வழங்கினார்.





ஈரோடு மாவட்ட கல்வி ஊக்கப்பரிசு கொடுக்கும் முப்பெரும் விழாவில் வரவேற்பு கொடுத்த போது திரு. தெய்வசிகாமணி அவர்கள் நீதியரசருக்கு மரியாதை செய்து அழைத்து சென்ற நிகழ்வு.



குடியாத்தம் கல்விக்காவலர் திருமிகு. கே.எம். கோவிந்தராசனார் பிறந்தநாள் விழாவில் பல வருடங்கள் தவறாது கலந்து கொண்டு சிறப்புரை வழங்கியது சிறப்பாகும்.




நீதியரசரின் நீதிப்பயணம் குறித்த நிகழ்வுகளை முதன்முதலில் இராணிமைந்தன் புத்தகம் எழுதி வெளியிட்ட நிகழ்வு.



நீதியரசர் தனது செயல்பாட்டினை சங்கத்தோடு நில்லாமல் தொண்டு மன்ற நிகழ்வுகள் பலவற்றிலும் கலந்து சிறப்பான அறிவுரை வழங்கி செங்குந்தர் சமுதாயம் எல்லா வழியிலும் மேன்மை அடையும் வழிகளை தொடர்ந்து தனது வாழ்நாள் குறிக்கோளாகவே வாழ்ந்து கொண்டிருப்பது நமக்கு பெருமையான தகவல்.

## நீதியரசரின் கலைகள் மீது பற்று

கலைகளில் நிரம்ப நாட்டமும் ஆர்வமும் கொண்டவர்.




நமது நீதியரசர் சென்னையில் மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி என்கிற கலை மற்றும் கலாச்சார அமைப்பின் தலைவராக இருக்கிறார். அதை ஒரு சபா எனக்கூறலாம். இந்தியா முழுவதும் வளரும் கலைஞர்களுக்கு மேடை அமைத்து அவர்களை உற்சாகப்படுத்துவதில் நமது நீதியரசருக்கு நிகர் இவரே.



மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி விழாவில்...
கிரேசி மோகன் – ஜெகதீசன் – கே. பாலசங்கர்



மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி விழாவில் திரைத்துறை மற்றும் நாடகத்துறையில் சாதனை புரிந்த திரு. எஸ்.வி.சேகர் அவர்களுக்கு அகாடமி சார்பில் நினைவு பரிசு வழங்கிய நிகழ்வு.




மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி விழாவில் திரைத்துறை மற்றும் நாடகத்துறையில் மின்னிய கல்விக்காவலர் திரு. ஐசரி கணேஷ் அவர்களுக்கு நினைவு பரிசு வழங்கிய நிகழ்வு.

மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி விழாவில் நாடக உலகில் நகைச்சுவை வேந்தர் திரு. கிரேசி மோகன் அவர்களை பாராட்டு விழாவின்போது இயக்குனர் திலகம் கே. பாலச்சந்தர் அவர்களும் கலந்து கொண்ட நிகழ்வு



டி.எம்.எஸ். அவர்களுக்கு பாராட்டு

மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி விழாவில்
திரைப்பட பாடகர். திரு. டி.எம். சௌந்தரராஜன் அவர்களுக்கு பாராட்டு விழா நிகழ்வின் போது நினைவு பரிசு வழங்கப்பட்டது.




எம்.ஜெகத்ரட்சகன் ஜெகதீசன் – சோனியா அகர்வால்

மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி விழாவில் மரியாதைக்குரிய திரு. ஜெகத்ரட்சகன் எம்.பி. அவர்களின் திருக்கரங்களால் நடிகை சோனியா அகர்வாலுக்கு நினைவு பரிசு வழங்கப்பட்டது.

மைலாப்பூர் அகாடமியின் வெள்ளி விழாவின்போது வாழ்நாள் சாதனையாளர் பட்டத்தை சினிமா நட்சத்திரம் திருமதி. சௌவுக்கார் ஜானகிக்கு வழங்கப்பட்டது.



நீதியரசர் உறவுகளை பற்றி பின்வருமாறு தனது கருத்தை கொண்டிருப்பது அனைவரும் கண்டிப்பாக உணரவேண்டி ஒன்று. உறவுகள் வெட்டுண்டு போவதற்கானது இல்லை. அவை வாழ்வதற்கு அவைகள் தாக்குவதற்கானது இல்லை முடிந்த மட்டும் தாங்குவதற்கு உறவுகள் உடைப்பதற்கு இல்லை உருவாக்குவதற்கு என்பதாக இவரது எண்ணம் வலுவாக உள்ளது.

**நீதியரசரின் பல்வேறு நிகழ்வுகளில் கலந்து கொண்டு சிறப்பு செய்த முக்கிய விவரங்களின் தொகுப்பு**



VIT நிறுவனர் வேந்தர் கல்வித்தந்தை திரு. ஜி. விஸ்வநாதன் அவர்களுடன்

கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களின் பிறந்தநாளில் பேராசிரியப் பெருந்தகை மாண்புமிகு. க. அன்பழகன் அவர்களுடன்



கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களின் பிறந்த நாள் விழாவில்




ரஷ்ய கலாச்சார மையத்தில் சக்கோவ்ஸ்கி மியூசிக் கிளப்பில்



மைலாப்பூர் ஆர்ட்ஸ் அகாடமி மதுரை மீனாட்சியம்மன் கோயில் டிரஸ்டியான திரு. கருமுத்து தியாகராஜ செட்டியார் அவர்களுக்கு நினைவு பரிசு வழங்கியபோது.

மைலாப்பூர் அகாடமி சிறந்த நாடகங்களுக்கும், நாடக நடிகர்களுக்கும், தொலை காட்சி சீரியல்களில் சிறந்தவைக்கும் சீரியலில் நடிக்கும் நடிகர் நடிகைகளுக்கும் பரிசு அளிப்பதோடு பல துறைகளில் சிறந்து விளங்குபவர்களுக்கும் பரிசு அளித்து மகிழும் ஒரு அசோசியேஷன் இதன் தலைவராக நமது நீதியரசராவார். அத்துடன் இல்லாமல் அசோசியேஷன் ஒரு இலவச மருத்துவமனையும் நடத்தி வருவது பெருமைக்குரியதாகும்.

மைலாப்பூர் அகாடமி வெள்ளி விழாவின்போது மேதகு. தமிழக ஆளுநர். பன்வாரிலால் புரோகித் அவர்கள் குத்துவிளக்கை ஏற்றி வைத்தார். அருகில் மைலாப்பூர் எம்.எல்.ஏ. அவர்களும் நல்லி. குப்புசாமி செட்டியாரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.





# St. John Ambulance Association

## Tamil Nadu State Centre

1, Mayor V R Ramanathan Road, Chetpet, Chennai 600 031

## Justice S. Jagadeesan

(former Judge of the Madras High Court)

is scheduled to assumes office as

**Chairman**

## St. John Ambulance Association

### Tamil Nadu State Centre

on Friday, 27th December 2019

between 10.00 a.m. and 12. noon



Thiru.Banwarilal Purohit, Hon'ble Governor of Tamil Nadu, Nominated Thiru. Justice S.Jagadeesan, as Chairman of the St.John Ambulance Association (Tamil Nadu State Centre), at Raj Bhavan, Chennai today (24.12.2019). Thiru. Anandrao V Patil, I.A.S. Secretary to Governor was present.



**சமீபத்தில் நமது நீதியரசரின் பேத்தியின் திருமணம் சிறப்பாக நடந்தது**



**திருமணத்தன்று தனது மகன்**
மற்றும்
**இருமருமகன்களுடன் நீதியரசர்**

நீதியரசரின் நட்புக்குள் பலர் இருக்க குறிப்பாக திருவாளர்கள். புதுவை சபாநாயகர் மாண்புமிகு வி.பி. சிவக்கொழுந்து மற்றும் அவரது சகோதரர் வி.பி. இராமலிங்கம் பின்னி மில் சேர்மென் ஸ்ரீ. நந்தகோபால் செட்டி நாட்டு அரசர்

எம்.எம். இராமசாமி செட்டியார் சென்னை தூர்தர்ஷன் இயக்குனர் ஏ. நடராஜன் வேலூர் வி.ஐ.டி. வேந்தர் திரு. விஸ்வநாதன் நல்லி குப்புசாமி செட்டியார் திரைப்பட இயக்குனர் எஸ்.பி. முத்துராமன் மூத்த வழக்கறிஞர் ஆர். காந்தி போன்ற சமுதாய ஆர்வலர்களை குறிப்பிடலாம்.



மாலத்தீவுகள் பயணத்தில் குடும்பத்தினருடன் ஜெகதீசன் அவர்கள்



நீதிபதியின் மணிவிழாவில் மோகனா - ஜெகதீச

23-03-2001 அன்று நீதியரசரின் அறுபது வயது நிறைவு மணி விழாவினை கொண்டாடிய போது



14-09-2017 ஓட்டல் **HILTON** -டனில் நீதியரசரின் ஐம்பதாவது திருமண நாளை தனது நெருங்கிய உறவு மற்றும் நெருங்கிய நண்பர்களை அழைத்து சிறப்பாக கொண்டாடிய தருணத்தில் அவரது சீனியர் நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்ற மாண்புமிகு நீதியரசர் திரு. வீராசாமி அவர்கள் கலந்து கொண்டு வாழ்த்தியதை பெருமையாக கூறினார்.



தனது சீனியர் திரு. இராமசாமி அவர்களிடம் ஆசீர்வாதம் வாங்கியபோது.

**ETERNAL AND EVER GROWING PROBLEM OF ENCROACHMENTS** என்கிற புத்தகத்தை நமது நீதியரசர் எழுதிய நூல் வெளியீட்டு விழா நிகழ்வில் மூத்த வழக்கறிஞர் திரு. காந்தி உள்பட பலர் கலந்து கொண்டனர்.

உறவு என்கிற கூட்டு முயற்சியில் கண்களுக்கு தெரியாத பாச பிணைப்பு ஏற்பட்டு அதனால் பயன் பெற்று வாழ்க்கை உயரவேண்டும் அது தேவையில்லாத வீண் விவாதங்களால் முறிந்துவிடகூடாது என்கிற உறுதியான எண்ணத்துடன் இருக்கிறார்.

அவரிடம் வந்த எத்தனையோ தம்பதிகளை சேர்த்து வைத்த பெருமைக்குரியவர் இன்றைய பணி ஓய்வு பெற்றபின் தமது நாட்கள் எப்படி நகர்கின்றன. என்று கேட்டதற்கு நாட்கள் நகரவில்லை ஓடிக்கொண்டிருக்கிறது என்கிறார்.

நீதியரசர் பதவி ஏற்ற நாள்முதல் இவரது செயல்பாடுகள் தனித்தன்மை கொண்டதாகவே இருந்தது. பொய்யான வழக்குகள், ஏமாற்று வேலைகள், திட்டமிட்டு வழக்கினை காலதாமதப்படுத்துதல் சட்டங்களில் உள்ள ஓட்டைகளை பயன்படுத்தி விசாரணைக்கு முட்டுகட்டை போடுதல் போன்ற காரியங்கள் இவரிடம் பலிக்கவில்லை.

ஒவ்வொரு வழக்கையும், அதன் போக்கையும் ஆராய்ந்து தீர்ப்பு வழங்குவதில் இவருக்கு நிகர் இவரே நீதியரசர் அழுத்தமாக கூறுவது வாழ்க்கை எப்படி வருகிறதோ அப்படியே அதனை ஏற்றுக்கொள்ளும் மன உறுதி இருக்க வேண்டும் என்கிறார்.

நமது நீதியரசர் தன்னுடைய பதவி காலத்தில் பல அமைப்புகளுக்கு தலைமைவகித்தார். அதில் முக்கியமானது எத்திராஜ் கல்லூரியின் தலைமை பொறுப்பு உள்பட பலவற்றின் தலைமை பொறுப்பையும் கூறலாம். இவ்வளவு சிறப்புகள் கொண்ட ஒரு மனிதர் ஒரு நல்லதொரு தாய் தகப்பனுக்கு பிறப்பது அவரது பூர்வ புண்ணியமாகும்.

அதேபோல இவருக்கு அமைந்த இவரது மனைவி ஸ்ரீமதி மோகனா அவர்கள் ஒரு சிறந்த துணையாக ஒவ்வொரு காலகட்டத்திலும் பக்கபலமாக, நல்ல எண்ணங்களுடன் தனது அன்புக்குரிய கணவரின் மனம் நோகாமல் வாழ்க்கை துணையாக சிறப்பாக அமைந்தது இவரது அதிர்ஷ்டம் என்றே கூறலாம்.

இவரது இரண்டு மகள்களும், உச்ச நீதிமன்ற வழக்கறிஞராக இருக்கும் ஒரு மகனும் மிகுந்த பாசத்துடன் இருப்பது இவரது கூடுதல் பலம் இதுவரை பல பல்கலைக்கழக துணை வேந்தர்களை நியமிக்குமுன் (**SEARCHING COMMITTEE**) தலைவராக ஓய்வு பெற்ற நீதியரசரை நியமித்து மனு செய்தவர்களைப்பற்றி தகவல்களை ஆராய்ந்து விளக்கமளித்திட ஆறு முறை வாய்ப்பு நமது நீதியரசருக்கு கிடைத்தது பெருமையான தகவலாகும்.

ஒரு வழக்கறிஞராக இருந்து அதன் பிறகு நீதிபதியாகி அனைவராலும் போற்றப்படக்கூடியவராக திகழ்ந்து தான் பிறந்த சமுதாயத்தின் நலனுக்கும் பாடுபட்டு வாழ்ந்தவரின் வாழ்க்கை வரலாற்றை எழுதும் போதே நானும் அவரது இளம் வயதிலிருந்து இன்றுவரை உடன் பயணித்தேன் அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதியது எனக்கு கிடைத்த மிகப்பெரிய பாக்கியம். நல்ல மனிதர்களின் வெற்றிகரமான வாழ்க்கையை வாழுகின்ற சொந்தக்காரர்களின் நட்பும் அறிமுகமும் அதிர்ஷ்டம் இருந்தால்தான் கிடைக்கும்.

சென்ற வருடம் டிசம்பர் மாதம் செயின்ட் ஜான் அவசர ஊர்தியின் தமிழக தலைமையை அலங்கரிக்கும் பதவியை தமிழக ஆளுனர் மேதகு பன்வாரிலால் புரோகித் அவர்கள் கரங்கலால் உத்தரவை பெற்றார். அதன் அகில இந்திய தலைவர் மாண்புமிகு இந்திய ஜனாதிபதியாவார்.



சென்னை தமிழறிஞர் பேரவையின் துணைத்தலைவராக நீண்ட காலமாக இருந்து வருகிறார். அவருக்கு பைந்தமிழ் காவலர் என்கிற பட்டத்தை தமிழ்நாடு காங்கிரஸ் மூத்த தலைவர் திரு. குமரி ஆனந்தன் அவர்கள் கரங்களால் தரப்பட்டது. புதுச்சேரி கம்பன் விழாவில் பல முறை கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றியுள்ளார்.

அதுபோல புதுச்சேரி கல்வி அறக்கட்டளை சார்பில் நடத்தப்படும் மாணவர் கல்வி ஊக்க பரிசளிப்பு விழாவிலும் கலந்து கொண்டு மாணவர்களின் எதிர்கால தேவையை தெளிவாக கூறி எதிர்காலத்தில் எவ்வாறு வாழ்க்கையில் முன்னேறுவது என தெளிவாக எடுத்துரைப்பதை வாடிக்கையாக கொண்டு சிறப்பாக பேசினார்.

மற்ற நிகழ்வுகளை காட்டிலும் மாணவர்கள் மத்தியில் பேசுவது மிகுந்த மகிழ்வை தருவதாக கூறுகிறார். செங்குந்த சமுதாயம் இனி வரும் காலங்களில் கல்வியின் பல பிரிவுகளை எடுத்து எல்லா துறைகளிலும் முன்னேற வழியை காட்ட வேண்டும் என்பது தனது இன்றைய கனவாக இருப்பதை அழுத்தமாக கூறுகிறார்.

ஒவ்வொரு செயலிலும் அவரது பேச்சிலும் ஊர்ந்து அவரது உணர்வுகளை நான் உள்வாங்கி எழுதியதை என் வாழ்நாள் பாக்கியமாக கருதுகிறேன். இதை முடிக்கவே மனமில்லை ஏதோ ஒரு சோகம் என்னுள் நேற்றுவரை திரும்ப திரும்ப அவரது வாழ்க்கையோடு பயணித்து பாபுஜியாகிய நான் மணப்பெண் திருமணத்தன்று தாய் வீட்டை விட்டு பிரியும் போது ஏற்படும் துயரம் எனக்குள் ஏற்பட்டது.



தனது சீனியர் மற்றும்
தனது ஜூனியர் மாண்புமிகு
இன்றைய நீதியரசராக இருக்கும்
திரு. ரமேஷ் அவர்களுடன்
நமது நீதியரசர்.

திருமண நிகழ்வின் போது
நடிகரும்
முன்னாள் சட்டமன்ற
உறுப்பினருமான
திரு. எஸ்.வி.சேகர்
அவர்களுடன்
உரையாடியபோது



## நீதியரசரின் தமிழ் பற்று



# முடிவுரை

நீதியரசரின் வாழ்க்கை இன்றைய சமுதாய இளைஞர்களுக்கு மிகப்பெரிய பாடமாக இருப்பதை அவரது வரலாறு கூறுகிறது.

ஒரு மனிதன் தன் தாய் வளர்ப்பும் தந்தையின் அரவணைப்பும் சேர்ந்து நல்ல பிள்ளையாக வளர்த்தெடுக்கும் போது சிறந்த மனிதராகிறார் என்பதை நினைவில் கொண்டு இன்றைய இளைய சமூகம் நமது நீதியரசரின் வாழ்க்கை வரலாற்றை படித்து தெளிவாக வேண்டும். ஒழுக்கத்தையும் நேர்மையையும் கடைபிடித்தால் தோல்வி இல்லை என்பதும் யாருக்கும் எதற்கும் அஞ்ச தேவையிருக்காது. இப்படி எல்லா நிலைகளிலும் சிறப்பை அடைந்த மனிதரை சமூகம் போற்றி வணங்கும் என்பதும் தெளிவாகிறது.

சதா ஓய்வறியா மார்கண்டேயனாக வாழும் நமது நீதியரசர் தனக்கு ஒரு நாளில் 24 மணிநேரம் போதவில்லை என்பதாகவே பதிவிடுகிறார். நீதியரசரின் வாழ்க்கை பயணத்தை எழுதும் வாய்ப்பு கிடைத்ததற்கு எனது மகிழ்ச்சியை வெளிப்படுத்தி இந்த புத்தகம் தெளிவாக எழுத பல தகவல்களை கொடுத்து உதவிய செங்குந்த உறவுகளுக்கு இந்த நேரத்தில் எனது நெஞ்சார்ந்த நன்றியை செலுத்துகிறேன். எல்லா வழிகளிலும் சிறந்து விளங்கும் நமது இனத்தை சார்ந்த நீதியரசருக்கு மத்திய அரசு கவர்னர் பதவியை கொடுத்து கவுரப்படுத்த வேண்டும் எனும் கோரிக்கையோடு வாழ்க்கை பயண சரிதையை முடிக்க மனமில்லாமல் தவித்ததை பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

நன்றி

**ப.மீ. பாபுஜி, புதுச்சேரி**



திரு. கே.எம்.ஜியாரின் மூத்த மகன் திரு. பாலசுப்ரமணியன் மகள் ஸ்ரீமதி. மகாலட்சுமி மற்றும் நீதியரசராக இருக்கும் நீதியரசர். ரா. சுதாகரன் அவர்களது, திருமணத்திலும் திரு. கே.எம்.ஜியாரின் இரண்டாவது மகன் திரு. சுந்தரவதனம் அவர்களின், இரண்டாவது மகள் திருமணத்திலும் கலந்து கொண்டதை நினைவு கூர்ந்தார். இன்றளவும் கே.எம்.ஜியார் குடும்பத்தோடு நல்ல உறவை வைத்திருப்பதையும் மகிழ்வுடன் தெரிவித்தார்.



அதோடு புதுச்சேரியில் பாபுஜி செங்குந்தர் தொகுத்து வழங்கிய வரலாற்று சிறப்பு மிக்க தென்னிந்திய செங்குந்த மகா ஜன சங்கத்தின் கடந்த நூறாண்டுகளின் வளர்ச்சியும் எழுச்சியையும் உள் அடக்கிய சதம் கண்ட குந்தர் சங்கம் எனும் நூலை பத்மஸ்ரீ. மயில்சாமி அண்ணாதுரை அவர்கள், மாண்புமிகு. புதுவை சபாநாயகர் திரு.வி.பி.சிவக்கொழுந்து அவர்கள், புரட்சி இயக்குனர் திரு. ஆர்.கே செல்வமணி அவர்களுடன் சேர்ந்து வெளியிட்டு சிறப்புரை ஆற்றியது. வரலாற்று ஆவனத்தில் நிற்கின்ற செயலாகும்.



சதம் கண்ட குந்தர் சங்க விழாவில் திரு. திருச்சி மெட்டல் மணி அவர்கள், திருமிகு. பின்னி மில் சேர்மென் நந்தகோபால் அவர்களுடன் நமது நீதியரசர்.



